தீபாவளி சிறப்பிதழ்!

3 புதிய தொடர்கள்

# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

LKI | 07.11.2010 | ₹ 10.00 | 96 பக்கங்கள் | www.kalkionline.com

வம்பர் மாத
டுப் புடைவை
ாட்டி ஆரம்பம்...

ங்குவோர்:




ருபுவனம் சில்க்
ர்ஸ் கோ-ஆப்ரேடிவ்
ஸைட்டி லிட்.



என் வாழ்வின் அதிர்ஷ்டம்!"



சிறுநீர்
கசிவா ?

அடி
இறக்கமா ?

இலவச தொலைபேசி ஆலோசனை : 0422 2323456

**GAURI - UROGYNECOLOGIST**

பெண்களுக்கு ஏற்படும் சிறுநீர் கசிவு, அடி இறக்கம் பிரச்சனைகளுக்கு தீர்வு!

இருமினாலோ, தும்மினாலோ சிறுநீர் கசிகிறதா ?

"சிலிங் சிகிச்சை"

அமெரிக்கா/இங்கிலாந்தில் பயிற்சி பெற்ற மருத்துவர்கள்! சிறந்த மருத்துவ முறைகள்!

**GAURI UROLOG**
(Chennai only)

ஆண்களுக்கு ஏற்படும் பிராஸ்டேட் பிரச்சனைகள்

சிறுநீர்ப்பை, சிறுநீரகத்தி ஏற்படும் கற்கள்

அவசரமாக அடக்கமுடியாமல் சிறுநீர் கழிக்கும் பிரச்சனைகள்

புற்றுநோய்




www.urogynecology.in

**GAURI**

| Chennai | Coimbatore | Bangalore |
| --- | --- | --- |
| No1. Crescent Park St | Bala Medical Center | (விரைவில்) |
| T.Nagar | Ramanathapuram | Motherhood |
| Chennai -17 | Coimbatore - 45 | Hospital |
| Ph:044-24341055 | Ph:0422-2323456 | IndraNagar |
| 044-24322591 | 0422-2323333 | |





ஒரு ஊர்ல ஒரு அம்மா அப்பா இருந்தாங்களாம்...

முதன்முதலாக சினிமா கேமரா முன்பு சூர்யா நிற்கும்போது அவருக்கு வேர்த்து விட்டதாம்!

# சூர்யா ஆல்பம்



சண்டை போடாத ஃப்ரெண்ட்ஸ்!



இந்த சீன்லதான் ஐ லவ் யு சொன்னேன்.











# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

ஆசிரியர் : சீதா ரவி
பொறுப்பாசிரியர்:
ஆர்.வெங்கடேஷ்
உதவி ஆசிரியர்கள்:
கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா
வடிவமைப்பு:
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
பா.கோபால்
தொலைபேசி: 044 - 4343 8888
தொலைநகல்: 044 - 4343 8899
ஆசிரியர் குழு:
044 - 4343 8822
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு:
044 - 4343 8811
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு:
044 - 4343 8833
subscription@kalkiweekly.com
விற்பனை பிரிவு:
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி:
www.kalkionline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagai.com

சந்தா விவரம் (ஒரு வருடம்):
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

இதழில் வெளியாகும் விளம்பரங்களின்
உண்மைத் தன்மைக்கு
கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.



**'இயக்குநர் ராம்கோபால்வர்மா, கஜினி படத்தில் சூர்யாவின் நடிப்பைப் பாராட்டி அனுப்பிய எஸ்.எம்.எஸ். தான் அவர்களை நண்பர்களாக ஆக்கியதாம்.**

● 'ரத்தசரித்திரம்' தமிழில் ஒரே பாகமாகவும், தெலுங்கு, ஹிந்தியில் இரண்டு பாகங்களாக எடுக்கப்பட்டிருக்கிறது. தற்போது வெளியாகியுள்ள ரத்தச்சரித்திரா தெலுங்கு மற்றும் ஹிந்திப் பதிப்பின் முதல்பாகத்தில் சூர்யா நடிக்கவில்லை. இரண்டாவது பாகத்தில் மட்டுமே சூர்யா நடித்துள்ளார். இந்தப் படத்துக்காக சூர்யா பிரைவேட் ஹிந்தி ட்யூஷன் எடுத்துக் கொண்டார் என்பதில் உண்மையில்லை. அவரது காதல் மனைவி ஜோதிகாவிடம் மட்டுமே ஹிந்தி கற்றுக் கொண்டார். இப்போதும் கற்று வருகிறார். இந்தப் படத்தில் தனது சூரி பாத்திரத்துக்காக ஹிந்தி டப்பிங் பேச மறுத்த சூர்யாவை, ''உங்கள் உச்சரிப்பு நன்றாகவே உள்ளது. நீங்களே பேசி விடுங்கள்'' என்று படத்தின் இயக்குநர் ராம்கோபால் வர்மா கேட்டுக் கொண்ட

# எஸ்.எம்.எஸ். கொடுங்க... சூர்யா கூப்பிடுவார்!

தால் டப்பிங் பேச இருக்கிறார்.

● 'ஏழாம் அறிவு' படத்தில் தனித்திறன் நிகழ்த்திக் காட்டும் சர்க்கஸ் கலைஞராக சூர்யா நடிப்பதால், இந்தப் படத்துக்காக பத்துக்கும் மேற்பட்ட சர்க்கஸ் சாகஸங்களை சூர்யா கற்றுக்கொண்டுள்ளார். அவற்றில் முக்கியமான மூன்றுக்கு படப்பிடிப்பில் பலத்த கைத்தட்டல் வாங்கினாராம். அந்த மூன்று சாகசங்கள், வாய் வழியே நெருப்பு ஜுவாலையை உருவாக்கிக் காட்டுவது, ஆறு பந்துகளைக் கீழே விழாமல் இரண்டு கைகளாலும் தொடர்ந்து பிடித்துக்காட்டுவது (ball juggle), ஒரு சக்கரம் மட்டுமே உள்ள சைக்கிளை ஓட்டுவது. சூர்யா கற்றுக் கொண்ட வித்தைகளை இந்தப் படத்தின் இசைவெளியீட்டு மேடையில் நிகழ்த்திக்காட்ட இருக் கிறாராம்.

● சூர்யாவின் சொந்தப் பட நிறுவனமான கிரீன் ஸ்டூடியோவின் கிளை அலுவலகத்தை ஹைதராபாத் திலும் திறந்துள்ளார். தனது அகரம் அறக் கட்டளையை ஆந்திர மாநிலத்துக்கும் விரிவுபடுத்தி நன்றாகப் படிக்கும் ஏழை மாணவர்களின் மேல்படிப்புக்காக ஹைதரா பாத்திலும் உதவ இருக்கிறார்.

● சூர்யாவைத் தொலைபேசியில் தொடர்பு கொள்ளும் முன் எஸ்.எம்.எஸ் அனுப்பினால் அவரே அழைப்பார். இயக்குநர் ராம்கோபால் வர்மா, கஜினி படத்தில் சூர்யாவின் நடிப்பைப் பாராட்டி அனுப்பிய எஸ்.எம்.எஸ்தான் அவர்களை நண்பர்கள் ஆக்கியதாக சூர்யாவே சொல்கிறார்.

● மனைவி ஜோதிகா பிஸியான ஹீரோயினாக நடித்துக்கொண்டிருந்த போது, பாடல் காட்சிகளில் ஜோதி காவின் ஒப்பனைக் கலைஞராகப் பணியாற்றிய செல்வி பானு பாஷ்யம் தான் எந்திரனில் ரஜினியின் தோற்றங் களை உருவாக்கியவர். 'அந்நியன்' படத்துக்காக இயக்குநர் ஷங்கரிடம் சூர்யாவால் அறிமுகப்படுத்தப்பட்ட பானு இப்போது ஏழாம் அறிவில் சூர்யாவின் லுக்குகளை உருவாக்கி யுள்ளார்.

● சூர்யாவின் சகோதரர் கார்த்தி முறைப்படி சண்டைப்பயிற்சி கற்றுக் கொண்டவர் என்றாலும், சூர்யா தனது தம்பிக்கு முறைப்படி சிலம்பம் கற்றுத் தந்துள்ளார்; தருகிறார்.

● சூர்யா, தான் ஈட்டும் வருவாயின் ஒருபகுதியைக் காற்றாலைகளில் முதலீடு செய்து வருகிறார்.

● இயக்குநர் ஷங்கரும், சூர்யாவும் அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்கள். சரியான கதை அமையும்போது நாம் சேர்ந்து படம் பண்ணலாம் என்று ஷங்கர் கூறியுள்ளார். சூர்யாவை நேரடி ஆங்கிலப்படத்தில் ஷங்கர் இயக்கலாம்



என்கிறார்கள். சூர்யா தனது ஓய்வு நேரங்களில் அமெரிக்க அக்செலன்ட் ஆங்கிலப் பேச்சுப் பயிற்சி கற்று வருவது இதற்காகக் கூட இருக்கலாம்.

- சூர்யாவுக்கு மிகவும் பிடித்தமான ஒன்று சைக்கிள் ஓட்டுவது. தனது தம்பி கார்த்தியுடன் பாலவாக்கம் கடற்கரையை ஒட்டிய சாலைகளில் ஹெல்மெட் அணிந்து அதிகாலை நேரத்தில் சைக்கிள் ஓட்டுவதைப் பார்க்கலாம்.

- சூர்யா பாலிவுட்டிலும் நாயகனாக ஆகிவிட்டாலும் தனது ஒப்பனை உதவியாளர் குமார், கார் ஓட்டுனர் சண்முகம் இருவரையும் மாற்றவில்லை.



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



(An ISO 9001 - 2008 Certified Organisation Reg. No. CCPL/QMS/D1744)
72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்.
(வழி) தாம்பரம், சென்னை - 63. போன் : 22760612, 22762299,29710350
City Office No.7/4, வேலு தெரு, மேற்கு மாம்பலம்.
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை - 600 033. போன் : 23714942



# தீபாவளி நல்வாழ்த்துக்கள்



## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 22 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய் தந்தையற்ற திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 150 மாணவர்கள் தங்கி படித்து வருகின்றனர். மேலும் கூடுவாஞ்சேரியில் உள்ள எங்களது குருகுலத்தில் 30 மாணவிகள் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன் நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | |
|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. 1,000 |
| • மதிய உணவு | ரூ. 2,000 |
| • இரவு சிற்றுண்டி | ரூ. 1,000 |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. 1,000 |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. 1,000 |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு,உடை,கல்வி) | ரூ.12,000 |
| • உயர் கல்வி வைப்புத்தொகை (EDUCATION ENDOWMENT) | ரூ.1,000 |

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு**

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் / வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்ற நட்களில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் ("SHIRI SARADHA SAKTHI PEETAM") என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மேலும் எங்களிடமிருந்து ரசீதைப் பெற்றுக் கொள்வது அவசியம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்.



# "திருமாவை

## தங்கபாலு பேட்டி

**சோ**னியா காந்தியின் திருச்சி விஸிட்டுக்குப் பின்னர் குஷியாக இருந்த காங்கிரஸ்காரர்களை, கூட்டணியில் இருக்கும் திருமாவளவனின் விமர்சனங்கள் காயப்படுத்தியிருக்கின்றன. இந்த நிலையில் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் தங்கபாலு என்ன சொல்கிறார்?

**தி.மு.க., அ.தி.மு.க. என்று மற்றவர் தோள்களில் மாறி மாறி சவாரி செய்யும் காங்கிரஸ் என்று திருமாவளவன் சொன்னதில் என்ன தவறு?**

"எந்தக் கூட்டணியுமில்லாமல் தனித்து போட்டியிட்டு எதாவது கட்சி தமிழகத்தில் ஆட்சிக்கு வந்திருக்கிறதா? இந்த இரு கட்சிகளுள் யாரோடு நாங்கள் கூட்டு வைத்தாலும் ஆட்சிச் சக்கரத்தில் அச்சாணியாக இருந்து, ஒரு நிலையான ஆட்சிக்கு உதவியாக இருந்து வருகிறோம்."

**எத்தனைக் காலம்தான் மற்றவர்கள் ஆட்சிக்கு வர காங்கிரஸ் துணை போய்க் கொண்டிருக்கும்?**

"நாங்கள் தேசியக் கட்சி. எங்களுக்கு தேசிய பார்வை, மாநில பார்வை என்று உண்டு. தேசிய அளவில் மதவாத சக்திகளை வேரறுத்து, ஜனநாயக சக்திகளை வலுப்படுத்துவது எங்கள் முதல் வேலை. அந்த நோக்கில் தேசிய அளவில் கூட்டணிகள் அமைகின்றன. அங்கே காங்கிரஸ் தலைமையிலான ஆட்சிக்கு ஆதரவாக இருக்கும் கட்சிகள் மாநிலங்களில் ஆட் அமைக்கும்போது காங்கிரஸ் கை கொடு கிறது. மாநிலங்களில் காங்கிரஸ் நான் விதமான அணுகுமுறைகளைக் கையா வது தெரியும். ஒன்று தனித்த காங்கிர ஆட்சி, அடுத்து தோழமைக் கட்சிகளி துணையுடன் ஆட்சி, மூன்றாவதாக தே மைக் கட்சிகள் ஆட்சி செய்ய காங்கிரஸ பங்கேற்கும் ஆட்சி. நான்காவதாக தோ மைக் கட்சி ஆட்சி செய்ய வெளியிலிருந் காங்கிரஸ் ஆதரவு. ஒரு தேசியக் கட் மாநிலங்களில் செல்வாக்கை தக்

வைத்துக் கொள்ள பல அணு குமுறைகள் தேவைப்படு கின்றன. தமிழ்நாட்டைப் பொறுத்தவரை, மாநிலத் தின் உரிமைகளைப் பறி கொடுக்காத வகையில், பல நலத்திட்டங்களையும் தேவையான நிதியையும் பெற்றுத்தர காங்கிரஸ் உதவு கிறது. ஒவ்வொரு கட்சியும் ஆட்சியைப் பிடிப்பதை நோக்கமாக வைத்திருக்கின்றன. அதுபோல் நாங் களும் ஆட்சிக்கு வருவோம். காங்கிரஸ் தலைமை தக்க நேரத்தில் யுக்திகளை வகுக்கும்.''

**திருமாவளவன், பாராளுமன்றக் குழுவினருடன் இலங்கைக்குச் சென்று ராஜபக்சேவுடன் கைகுலுக்கி விருந்து சாப்பிட்டது ஏன்?**

சோனியா அம்மையார் பேசி னார்.''

**இலங்கையில் இறுதிக் கட்டப் போரைத் தடுத்து நிறுத்தி, தமிழர்களின் உணர் வுகளைக் காக்காத கட்சி காங்கிரஸ். கொன்று குவித்த ராஜபட்சேவுக்கு எப்படி வரவேற்பு கொடுத்து மகிழ்ந் தது காங்கிரஸ் என்ற திருமா வளவன் குற்றச்சாட்டு பற்றி...?**

''இலங்கையில் தமிழர்கள் இன்ன மும் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறார் கள். மோதல் நடந்தது இலங்கை ராணு வத்துக்கும் விடுதலைப் புலிகளுக்கும் தான். இலங்கைத் தமிழர்களுக்காகத் தமது உயிரைக் கொடுத்து தியாகம் செய்த வர் ராஜீவ்காந்தி. தொடர்ந்து இலங்கைத் தமிழர்களின் காவல் அரணாக இருந்து காத்து வருவது காங்கிரஸ். தமிழர்களின் மறுவாழ்வுக்கு 5000 கோடி ரூபாய் கொடுத் தது மத்திய அரசு. காங்கிரஸ் தமிழர்களுக்கு விரோதமாகச் செயல்படுகிறது என்ற தோற்றத்தை உருவாக்க முயல்கிறார் திருமாவளவன்.

**தொண்டர்களின் உணர்வை மதித்து தலைமை செயல்பட வேண்டும் என்று திருச்சியில் சோனியா முன்பே ப.சிதம்பரம் பேசி னாரே!**

'' 'அடுத்து வரும் ஆட்சி யில் காங்கிரஸும் அங்கம் வகிக்க வேண்டும்' என்ற தொண்டர்களின் விருப்பத்



# தி.மு.க. தூண்டிவிடுகிறதா?”



தைத்தான் சிதம்பரம் சொன் னார். அதற்குப் பதிலளிக்கும் விதமாகத் தானே 'காங்கிரஸ் தன் தனித்தன்மையை பாது காக்க வேண்டும்; இந்தக் கூட்டம் ஒரு புது அத்தி யாயத்தின் தொடக்கம்' என்று

அவரது முயற்சி எடுபடாது. ஒரு தேசத்தின் தலைவர் நமது நாட்டுக்கு வரும்போது பண்போடு வரவேற்பது நமது மரபு. திருமாவள வனுக்கு இவ்வளவு ரோஷம் ஆவேசம் இருக்குமென்

னால், பாராளுமன்றக் குழுவினருடன் இலங்கைக்குச் சென்று ராஜபட்சேவுடன் கைகுலுக்கி விருந்து சாப்பிட்டது, ஏன் என்பதை விளக்குவாரா?''

**எங்களால்தான் காங்கிரஸ் ஒன்பது இடங்களில் வென்றது என்கிறாரே திருமாவளவன்?**

''இவருக்குக் கூட்டணி தர்மம், பண்பாடு எதுவும் தெரியவில்லை. தலித்துகளுக்கு காங்கிரஸ் கட்சி செய்த நன்மைகளைப் போல வேறு எந்தக் கட்சியும் செய்திருக்க முடியாது. தேர்தலைப் பார்த்து பயப்படும் கட்சியல்ல காங்கிரஸ். தோழமைக் கட்சிகளுக்கு உகந்த மரியாதை கொடுக்க வேண்டும். கண்ணியமாகக் கருத்துச் சொல்ல வேண்டும். தலித் பெயரில் அரசியல் கட்சி நடத்தும் இவர் இப்படிப் பேசக்கூடாது.''



**வரும் தேர்தலில் காங்கிரஸ் தி.மு.க.வுடன் கூட்டணியில் தொடரும் என்று சோனியா உறுதியாகச் சொல்லாததால் முதல்வருக்குக் கோபம் என்கிறார்களே?**

'''நாங்கள் இப்போது கூட்டணியில் இருக்கிறோம்; கூட்டணியை மதிக்கிறோம்' என்று சோனியா சொன்னாரே?! சில நாட்கள் முன்பு சென்னை வந்த தமிழக காங்கிரஸ் பொறுப்பாளர் குலாம் நபி ஆசாத், 'கூட்டணி தொடரும்' என்று மட்டுமல்ல, 'மூன்றில் இரண்டு பங்கு இடங்களை வெல்வோம்' என்றும் சொன்னாரே. மீடியா எதையாவது கிளப்பி விடுகிறது.''

**திருமாவளவனை கலைஞர்தான் தூண்டிவிடுவதாகச் சில காங்கிரஸ்காரர்கள் பேசுகிறார்களே?**

''தமிழகத்தின் மூத்த அரசியல் தலைவரான கலைஞர், நல்ல பண்பாடு, மரபுகளுக்குச் சொந்தமானவர். தாம் சொல்ல விரும்புவதைத் தெளிவாகவும் தைரியமாகவும் பேசக் கூடியவர். ஆதரிக்கும் போதும், எதிர்க்கும்போதும் தமது நிலைப்பாட்டை அழுத்தமாக வெளிப்படுத்துபவர். அப்படிப்பட்டவர் திருமாவளவனைத் தூண்டிவிட்டு பேசச் சொல்கிறார் என்பது முற்றிலும் தவறான கருத்து. இது போன்ற குற்றச்சாட்டு நல்ல கற்பனையாகத்தான் இருக்கும்.''

**காங்கிரஸில் நீங்கள் கலைஞர் ஆதரவாளரா?**

''கடந்த நாற்பது ஆண்டு கால காங்கிரஸ் பேரியக்கத்தில் எந்தவித ஊசலாட்டத்துக்கும் உள்ளாகாமல், தலைமையின் முடிவுகளை ஏற்று நடந்து, ஒரே இயக்கத்தில் இயங்கி வருபவன் நான். எம்.ஜி.ஆர்., ஜெயலலிதா, தற்போது கலைஞர் ஆகியோரோடு கூட்டணியில் இருக்கும்போது தலைமை எப்படி வழி காட்டுகிறதோ அதன்படி நடந்து கொள்கிறவன் நான். எனது வழிகாட்டி காங்கிரஸ் தலைமைதான். இதைப் புரிந்துகொள்ளாமல் என்னை விமர்சனம் செய்பவர்கள், சோனியா தலைமையை ஏற்றுக் கொள்ளாதவர்களாகவும் கட்சிக்குக் கட்டுப்படாதவர்களாகவும்தான் இருக்க முடியும்.''

**- ப்ரியன்**

# ஜே.எஸ்.ராகவன்



# டமால்.. டுமீல்!

❐ திருப்பதி கோயிலின் ஸ்தல விருட்சம் புளிய மரமாம்

**பணம் காய்ச்சி மரம் இல்லையா?**

❐ மும்பை சாலையில் எச்சில் துப்பியவர்கள் நாண ரோஜாப்பூ பரிசளிப்பு

**துப்புவது தப்...பூ! என்று மென்மையாக உணர்த்தவா?**

❐ பின்லாந்து பனிக் கரடி ஒன்று தினம் யோகா செய்கிறது.

**அதாவது கரடி விடாது செய்கிறது.**

❐ காந்திஜிக்கு கால் பந்து மீது மிகுந்த ஈடுபாடு இருந்ததாம்.

**அதான் அவர் கொள்கைகள் பந்தாடப் படுகின்றனவா?**

❐ எலிசபெத் அரசி தன்னை ஏழை என்று சொல்லிக் கொள்கிறார்

**முன்னாள் ராணின்னு எப்போ சொல்லிக் கொள்வார் என சார்லஸ் முனகலாம்.**

❐ பாரிஸில் பிச்சைக்காரர்களுக்காக ஒரு பத்திரிகை வெளி வருகிறது.

**இதன் விலை பிச்சைக் காசாகத் தான் இருக்கும்.**

❐ அமெரிக்கப் பெண்ணுக்கு 08.08.08, 09.09.09, 10.10.10 மூன்று குழந்தைகள் பிறந்துள்ளன.

**தொடர்ந்து 13.13.13 ஆறாவது பிறக்க வாய்ப்பில்லை!**

❐ இந்தியாவில் கழிப்பறைகளைவிட செல்ஃபோன்கள் அதிகமாம்.

**கிராமங்களில் ரோமிங் வசதியுடன் உள்ள இடங்கள் கணக்கில் வராதே!**

❐ தன் உதிர்ந்த முடிகளாலே ரோமானியப் பெண் ரெயின் கோட் தயாரிப்பு!

**அதற்கும் சேர்த்து ஷாம்பு வாங்க வேண்டுமே!**

❐ குஜராத் குயவர் மன்சுக் பாய் செய்யும் களிமண் பிரிட்ஜ் ஏற்றுமதி ஆகிறது.

**இவர் மண்டை பூரா மூளை**

❐ அதிகமான அலுவலகச் சத்தத்தினால் இருதய நோய் வருமாம்

**"இதயத்தின் தொண்டை தொண்டைகள் உணர்ந்து அமைதி காக்க வேணாமா?**

❐ ராவணனை ரோபோவாக்கிய ராமாயண ரீமிக்ஸ் படத்தின் டைட்டில்?

**எந்திரன் கெட்டதும் பெண்ணாலே!**



# ஊர்ப்பாசம்

## தனலட்சுமி டாக்கீஸ்

**பா**ரதி பிறந்த தூத்துக்குடி மாவட்டத்தில் சாயர்புரம் எனும் சிற்றூரின் அருகே இருக்கும் நடுவைக் குறிச்சிதான் என் ஊர். வெள்ளந்தி மனிதர்களாலும் எண்ணிலடங்கா விளையாட்டினாலும் நிறைந்தது என் பால்யம்.

பள்ளி மைதானத்தில் ''ரவுண்ட் ரேஸ்'' அல்லது ''சில்லாங்குச்சி'' விளையாடிக் கொண்டிருக்கும்போது நேரம் என்ன என்பதை எங்களுக்கு உணர்த்துவது எங்களூர் தனலட்சுமி டாக்கீஸ். தினம் இரண்டு காட்சிகள் மட்டுமே கொண்ட சிறிய தியேட்டர்.

'நான் காற்று வாங்க போனேன் ஒரு கவிதை வாங்கி வந்தேன்', 'குமரிப் பெண்ணின் உள்ளத்திலே குடியிருக்க நான் வரலாமா' என தினம் ஒலிக்கும் பாடல்கள் எங்கள் வாழ்வோடு கலந்துவிட்டவை. தரை டிக்கெட், பெஞ்சு டிக்கெட், சேர் டிக்கெட், சோபா டிக்கெட் என்று வரிசைப்படுத்தியிருப்பார்கள். பெண்கள் பக்கத்துக்கும் ஆண்கள் பக்கத்துக்குமிடையே குட்டிச்சுவரொன்று நிற்கும். அலைபேசிகளும் இணையமும் வருவதற்கு முந்தைய காலக்கட்டமது. காதலர்கள் தாங்கள் நேசிப்பவரைச் சந்திக்கும் இடமாக விளங்கியது எங்கள் தனலட்சுமி டாக்கீஸ். இடைவேளையின் போது கிடைக்கும் முறுக்கும், வடையும் வேறெங்கும் கிடைக்காத சுவை கொண்டவை.



✱ கவிஞர் நிலாரசிகன்

கால்சட்டை நிறைய கோலிக் காய்களுடன் நண்பர்களுடன் அரட்டையடித்துக் கொண்டு தனலட்சுமி டாக்கீஸில் படம் பார்க்கும்போது கிடைத்த பரவசம் சென்னையின் மல்டிப்ளெக்ஸில் பார்க்கும்போது கிடைப்பதில்லை என்பதே நிதர்சனம்.

**- கவிஞர் நிலாரசிகன்**

## இனிச்சமரம்

**நீ**ங்கள் எப்போதாவது 'இனிச்ச மரம்' பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? தூத்துக்குடி மாவட்டம் விளாத்திக்குளம் அருகில் இருக்கும் எங்கள் ஊரான வேலிடுபட்டி எனும் கிராமத்தில், ஊரின் தென்கிழக்கில் ராட்சதக் குடை போல பரந்து விரிந்திருக்கும் முதுமையான ஒரு புளிய மரம் இருக்கிறது. அம்மரத்தின் பழத்தை ஒருமுறை சுவைத்துப் பாருங்கள். ஒரு புளிய மரத்தினை இக்கிராம மக்கள் ஏன் இனிச்சமரம் என்றே அழைக்கிறார்கள் என்பதன் காரணம் புரியும். காற்றுக்கு விழும் புளியம் பழங்களைச் சமைப்

# இனிச்சமரம் பெருமாள்

இடம்பெறும் ஒவ்வொரு ஊர் பாசத்துக்கும் பரிசு ரூ.50/-

வாசகர்களே! மண் மணம் மாறாத உங்கள் ஊர் பாசத்தை நெகிழ்வோடு 10 வரிகள் குறிப்புடன் 'ஜம்'முன்னு எழுதி அனுப்புங்க... உங்க ஃபோட்டோ மறந்திடாதீங்க.



# ANBAGAM REHABILITATION CENTRE

Run By TERDOD A Regd. Public charitable Trust Thirunilai, Vichur Post,
Chennai - 600 103. Phone : 2901 3306/94440 09988/ 92832 75561 Website : www.anbaham.org

**இனிய தீபாவளி நல்வாழ்த்துக்கள்**

**அனாதை மன நோயாளிகளைக் காப்பாற்ற உதவுங்கள்**

"அன்பகம்" சாலையோரத்தில் கவனிப்பாரற்று சுற்றித்திரியும் அனாதை ஆண் மனநோயாளிகளைக் காப்பாற்றி, அன்பகத்தில் தங்க வைத்து, மருத்துவ வசதி அளித்து, அவர்களை தங்கள் இல்லங்களில் கொண்டு சேர்க்கும் நல்லதொரு பணியினை செவ்வனே செய்யும் ஒரு தொண்டு நிறுவனம்.

100 நோயாளிகளைப் பராமரிக்கும் வசதி கொண்டது. கடந்த 11 ஆண்டுகளாக 500 மனநோயாளிகளைக் காப்பாற்றி அவர் தம் இல்லங்களில் கொண்டு சேர்த்து உள்ளோம். பராமரிப்பு செலவு அனைத்தும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலமே நடைபெற்று வருகிறது.

அன்பகத்திற்கு வரும்போது



| | |
|---|---|
| காலை சிற்றுண்டி | ரூ. 300/- |
| மதியஉணவு | ரூ. 1000/- |
| இரவு உணவு | ரூ. 500/- |
| ஒரு நாள் உணவு | ரூ. 1500/- |
| ஒரு நோயாளியை ஒரு மாதம் பராமரிக்க | ரூ. 2000/- |

அன்பகத்தில் குணமான பின்பு



திருமண நாள், குழந்தைகளின் பிறந்தநாள், தொழில் / வியாபாரம் தொடங்கிய நாள் மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்ற நாட்களில் அனாதை மனநோயாளிகளுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளலாம்.

நன்கொடைக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு. FCRA, Reg No. 075900916 தங்கள் நன்கொடையை TERDOD என்ற பெயரில் மேற்கண்ட முகவரிக்கு Cheque / DD / MO தபால் மூலம் மட்டும் அனுப்பி வைக்கும்படி பணிவுடன் கேட்டுக் கொள்கிறோம்.

Courier-ல் அனுப்புவதைத் தவிர்க்கவும்.

Bus Route : From Koyambedu & Parrys : 38G
From Red Hills : 57E, 57G

நன்கொடை அளித்த அனைத்து நல் உள்ளங்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றி


பதற்கு எடுத்துச் செல்லும் பெண்கள், இம்மரத்தின் பழத்தில் ரசம் வைக்கக் கூடத் தயங்கும் அளவுக்கு இனிப்பான புளியம்பழங்களைத் தரும் மரம் இந்த இனிச்சமரம்.

இம்மரத்தின் அருகினில் இருக்கும் ஆரம்பப் பள்ளியில் நான் படித்தபோது, இடைவேளை மணியடித்ததும் போட்டி போட்டுக் கொண்டு அம்மரம் நோக்கி ஓடிச் சென்று, இனிச்சமரத்தின் பழங்களைப் பொறுக்கித் தின்போம். பழம் கிடைக்காத சக நண்பர்கள் காசு கொடுத்து புளியம்பழத்தை வாங்கித் தின்ற ஞாபகம் இன்றும் நினைவில் இருக்கிறது. கோலி, பம்பரம், ஊஞ்சல் என எல்லோருக்கும் பால்ய காலத்தில் தாய்மடியாக விளங்கிய அம்மர நிழலில் சிறிது நேரம் அமர்ந்து நினைவுகளை மீட்டெடுப்பதை இன்னமும் பலர் வாடிக்கையாகக் கொண்டிருக்கிறார்கள். மரப்பலகையும், ரசம் போன கண்ணாடியுமாக, இம்மரத்தின் நிழலில் பெரும்பாலான நேரங்களில் அமர்ந்திருக்கும் முடி திருத்துபவரான பெருமாளுக்கு, எல்லோரையும் விட அதிகமான பாசம் இம்மரத்தின் மீது உண்டு. காற்றும் மழையுமாக இருந்த ஒரு நாளில், பல மரங்கள் சாய்ந்து கிடந்தாலும், இனிச்சமரத்தின் வடக்குப் பக்கமாய் இருந்த ஒரு பெரிய கிளை ஒடிந்து விழுந்தபோது, ஊரே அங்கு ஓடி வந்து சோகத்தை அவ்விடத்தில் கொட்டித் தீர்த்தது.



❋ உழவன்

எனது தாத்தாவின் பால்ய காலத்திலிருந்து இன்றுவரை இனிச்சம்பழங்களை வழங்குவது மட்டுமல்லாது, எங்கள் ஊரின் ஓர் அடையாளமாக இருக்கும் இம்மரத்தின் மீதிருக்கும் எங்களின் பாசம் என்றும் மாறவே மாறாது!

- உழவன், முகலிவாக்கம்



# கல்கி




2010 நவம்பர் 7
விக்ருதி ஐப்பசி 21
மலர் : 69
இதழ் : 15


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## தொலைநோக்குடன் நடைபெறும் தில்லுமுல்லு!

ஈழத்தமிழர்களின் மறுகுடியமர்வுக்கு இலங்கை அரசு முனைப்பு காட்டாமல் இருக்கிறது. இதனை நாம் ஒருபுறம் கடுமையாக விமர்சிக்கிறோம்; கண்டனம் செய்கிறோம். இன்னொரு புறத்திலோ நம் நாட்டிலேயே நர்மதா நதிக்குக் குறுக்காக அணை கட்டும் முயற்சியில் நாற்பதாயிரம் குடும்பங்கள் மறுகுடியமர்வு செய்யப்படாமல் காத்துக்கொண்டு இருக்கின்றன!

நர்மதா பச்சாவோ ஆந்தோளன் தலைவி மேதா பட்கர், தமது இயக்கத்தின் வெள்ளி விழாவை ஒட்டி இத்தகவலைத் தெரிவித்திருக்கிறார். கால் நூற்றாண்டுக் கால போராட்டம், பாதிக்கப்பட்ட மக்களுக்கு விமோசனம் பெற்றுத் தராவிட்டாலும் உண்மைத் தகவல்களை உலகறியச் செய்துகொண்டு இருக்கிறது என்பது பெரிய விஷயம்தான். ஆரம்பத்தில் 7,500 குடும்பங்களே பாதிக்கப்படக்கூடும் என்று கூறியது நர்மதா தொடர்பான நடுவர் மன்றம் (tribunal). ஆனால், இப்போது, 51,000 குடும்பங்கள் பாதிக்கப்பட்டுள்ளதை அரசே அதிகாரபூர்வமாக ஏற்கிறது.

வளர்ச்சித் திட்டங்கள் ஒரு நாட்டின் முன்னேற்றத்துக்கு இன்றியமையாதவை. ஆனால், அவை மிகுந்த கவனத்துடனும் தீர்க்கதரிசனத்துடனும் தீட்டப்பட வேண்டும். சர்தார் சரோவர் திட்டத்துக்கு நிலம் ஆர்ஜிதம் செய்வதற்கு முன்பாகவே பாதிக்கப்படக்கூடிய குடும்பங்களுக்குத் தகுந்த மாற்றிடங்களை அடையாளம் கண்டிருக்க வேண்டும். தற்போது, பாதிக்கப்பட்ட பதினொராயிரம் குடும்பங்களுக்கு குஜராத் அரசு செய்வித்த

யாரை ஒத்திக்கணும்னு எனக்குத் தெரியும் நான் பார்த்துக்கறேன்
மாட்டுக்கு பதலா அந்த காரை பூட்டினா வண்டி ஜோரா ஓடுமே...
இம்யூ
தி.மு.க கூட்டணி
ரிப்பேர் முடியட்டும் நானே ஸ்பீடா போயிடுவேன்




மறுகுடியமர்வு மட்டுமே முழுமையாக நிகழ்ந்திருக்கிறது. மகாராஷ்டிராவில் நான்கு ஆண்டு களுக்கு முன் ஒதுக்கப்பட்ட நிலங்கள் இன்னமும் மக்களுக்குப் பட்டா செய்து தரப்படவில்லை.

இவ்வாறு கொள்கை மட்டத்திலும் சரி, நிர்வாக ரீதியிலும் சரி, நிறையவே குழப்பங்களும் முரண்பாடுகளும் சீர்கேடுகளும் நிலவி வருகின்றன.

**செ**ன்னை தி.நகரில் விளையாட்டு மைதானம் ஒன்றை 'சுரங்க கார் பார்க்'காக உருமாற்ற மாநகராட்சி முயற்சி மேற்கொண்டது. மைதானத்தைப் பயன்படுத்திவந்தவர்கள் பொதுநல வழக்கு தொடர்ந்து நீதிமன்றம் சென்று போராடி அந்த முயற்சிக்கு முற்றுப்புள்ளி வைத் துள்ளனர். உயர்நீதிமன்றம் தடை விதித்ததால், மாநகராட்சி, உச்சநீதி மன்றம் சென்று மனுசெய்ய, மனுவைத் தள்ளுபடி செய்த உச்சநீதி மன்றம், மாநகராட்சியைக் கடுமையாகக் கண்டனம் செய்துள்ளது. தி. நகரில் ஏராளமான கட்டட விதி மீறல்களை மாநகராட்சி ஏற்று, முறைப்படுத்தலுக்கு உட்படுத்தி இருப்பதைச் சாடி இருக்கிறது.

ஆக, ஒரு பக்கம் செல்வாக்குப் படைத்தோரின் முறைகேடுகளை அனுமதிப்பதும் இன் னொரு பக்கம் எளிய மக்களின் வாழ்விடத்தைப் பிடுங்கிக்கொள்வதுமாக அநீதி மலிந்து வருகிறது.

இதே அரசுதான், ஜெயலலிதாவின் கொடநாடு எஸ்டேட்டில் மக்கள் கடந்து செல்லக் கூடிய நடைபாதை, நீண்ட நெடுங்கால அனுபவ பாத்தியதையின் காரணமாக அவர்களுடைய பயன்பாட்டுக்கு ஒதுக்கப்பட வேண்டும் என்ற நிலைபாட்டை மேற்கொண்டு இருக்கிறது. அந்த நிலத்தை ஆர்ஜிதம் செய்து மக்களுக்கு உதவப்போவதாகவும் அறிவிக்கிறது. இதற்காக உச்சநீதி மன்றத்தில் வாதாடுகிறது!

அரசியல் கலப்புடன் கூடிய திட்டமிடலும் எப்படியெல்லாம் முறைகேடாகச் சம்பாதிக்கலாம் என்ற தொலைநோக்கும்தான் இன்று ஆட்சிப் பொறுப்புக்கு வருவோரிடம் இருக்கின்றன. இந்தப் பின்னணியில், வளர்ச்சித் திட்டங்கள் பலவும் மக்களுக்குச் சோதனைத் திட்டங் களாகவே அமையும்! அவர்களுடைய பொறுமைக்கும் ஓர் எல்லையுண்டு. மாவோ - நக்சல் இயக்க வளர்ச்சியும் வன்முறையும் இதைத்தான் உணர்த்திக்கொண்டு இருக்கின்றன. ●




சீனி. குலசேகரன், குரோம்பேட்டை

பெரும்பாலான மியூச்சுவல் ஃபண்டுகளில் எஸ்.ஐ.பி, மைக்ரோ எஸ்.ஐ.பி, ஆகியவற்றைத் தயவுசெய்து விளக்கமாகக் கூறவும். இதன் பயன் என்ன? எவ்வளவு ரிட்டர்ன் கிடைக்கும்? இது பாதுகாப்பான வழியா?

**டி.பாலசுந்தரம்:** பங்குச்சந்தையில் எதிர்காலச் சூழல் எப்படியிருக்கும் என்பதைக் கருத்தில் கொண்டு அந்த ஏற்ற இறக்கத்தின் பலாபலன்களை முதலீட்டாளர்களுக்குச் சாதகமாக ஆக்கித்தருவதற்கான வழிவகைகளைச் செய்பவைதான் சிஸ்டமேட்டிக் இன்வெஸ்ட்மெண்ட் ப்ளான்கள். சிஸ்டமேட்டிக் ப்ளான்கள் மியூச்சுவல் ஃபண்டில் முதலீடு செய்வதற்கும், மியூச்சுவல் ஃபண்டில் இருந்து முதலீட்டை வெளியில் எடுப்பதற்கும் உதவும் வகையில் சிஸ்டமேட்டிக் ப்ளான்கள் வடிவமைக்கப்பட்டுள்ளன.

மியூச்சுவல் ஃபண்டுகளில் முதலீடு செய்ய விரும்புபவர்கள் ஒரு குறிப்பிட்ட அளவு பெரிய தொகையை (எடுத்துக்காட்டாகக் குறைந்தபட்சம் ரூபாய் 5,000 அல்லது 10,000) கையில் இருந்தால் மட்டுமே முடியும் என்றிருந்தது ஒரு காலத்தில். அந்த நிலையை மாற்றி நீங்கள் மாதாந்திரமாக ரூபாய் 500 முதல் 1,000 வரை மியூச்சுவல் ஃபண்டுகளில் முதலீடு செய்ய வழிவகை செய்ததுதான் சிஸ்டமேட்டிக் இன்வெஸ்ட்மெண்ட் ப்ளான் என்றழைக்கப்படும் எஸ்.ஐ.பி. இந்தத் திட்டத்தின் கீழ் மாதாந்திரம் நீங்கள் முதலீடு செய்யும் தொகைக்கான மியூச்சுவல் ஃபண்ட் யூனிட்டுகள் உங்களுக்கு அன்றைய விலையில் தரப்படும். ரூபாய் 500, 1,000 என்பதெல்லாம் போய் இன்றைக்கு ரூபாய் 50, 100 என்றுகூட மியூச்சுவல் ஃபண்டுகளில் முதலீடு செய்ய முடியும். இது போன்ற மிகக்குறைந்த தொகையை முதலீடு செய்ய வழிவகை


டி.பாலசுந்தரம்



# எஸ்.ஐ.பி. மைக்ரோ எஸ்.ஐ.பி. என்ன வித்தியாசம்?

முதனம், சட்டம், நுகர்வோர் பாதுகாப்பு சம்பந்தமான கேள்விகளை 'கொஸ்டின் பேங்
செல்ஃபோனில் KAFIN என்று டைப் செய்து, ஒரு ஸ்பேஸ் விட்டு, கேள்வி, பெயர், ஊ

செய்யும் திட்டங்களைத்தான் மைக்ரோ எஸ்.ஐ.பி. என்று அழைக்கிறார்கள். இந்த திட்டங்களின் செயல்பாடுகள் எஸ்.ஐ.பி திட்டத்திலிருந்து எந்தவிதத்திலும் மாறுபட்டிருக்காது. மாதாந்திர முதலீட்டுத் தொகை மட்டுமே உங்கள் கைக்கு அடக்கமாக மிகவும் குறைகின்றது.

எஸ்.ஐ.பி. என்பது மியூச்சுவல் ஃபண்ட் திட்டத்தில் முதலீடு செய்வதற்கான ஒரு வழிமுறையே தவிர இது ஒரு புதுமாதிரியான மியூச்சுவல் ஃபண்ட் திட்டம் அல்ல. எஸ்.ஐ.பி.யில் பணம் போடும் முதலீட்டுக் காலம் என்பது மியூச்சுவல் ஃபண்டுகள் வழங்குகின்ற கால அளவும் உங்களின் முதலீட்டுத் திட்டத்தையும் சார்ந்த ஒரு விஷயம். மியூச்சுவல் ஃபண்ட் முதலீடுகள் எந்த அளவு ரிஸ்க் இருக்கின்றதோ அதே அளவுக்கு எஸ்.ஐ.பி. மூலம் செய்யும் மியூச்சுவல் ஃபண்ட் முதலீடுகளிலும் ரிஸ்க் இருக்கின்றது. இதில் கிடைக்கும் ரிட்டர்ன் பங்கு சந்தையின் போக்குக்கேற்ப மாறுபடக்கூடியதே. சிஸ்டமேட்டிக் திட்டங்களில் நீங்கள் இறங்கும்போது உங்கள் ஏற்ற/இறக்கம் குறித்த கணிப்புகள் சரியாகப் பலிக்கும் பட்சத்தில் லாபம் சிறிதளவு அதிகரிக்க வாய்ப்புள்ளது.



மோகன், ஜாபர்கான்பேட்டை

**எனக்குத் திருமணமாகி மூன்று ஆண்டுகள் ஆகின்றன. எனக்கு 1 1/2 வயதில் ஒரு பெண் குழந்தை இருக்கிறது. கருத்து வேறுபாடு காரணமாகப் பிரிந்து சென்ற என் மனைவி தனக்கும் குழந்தைக்கும் ஜீவனாம்சம் கேட்டு மனு செய்துள்ளார். ஆனால், அவளுடைய தந்தை நல்ல வசதியானவர். வசதியான சூழலில்தான் அவள் இருக்கிறாள். இருப்பினும் அவளுக்கும் குழந்தைக்கும் பணம் கேட்பது சட்டப்படி சரியா?**



* த.ராமலிங்கம்

**த.ராமலிங்கம்:** கண்டிப்பாகச் சட்டப்படி சரிதான். அவளின் தந்தை, தாய் வசதியாக இருக்கிறார்கள் என்ற காரணத்தைக் காட்டி மனைவிக்கும் உங்கள் குழந்தைக்கும் மாதச் செலவுக்கான பணத்தைத் தரமாட்டேன் என்று நீங்கள் சொல்ல முடியாது. ஒரு வேளை உங்கள் மனைவி வேலையிலிருந்து பணம் சம்பாதித்தால் அவருக்குப் பணம் தர நீங்கள் மறுக்கலாம். அப்போதும்கூட உங்கள் குழந்தைக்கு மாதச் செலவுக்காகவும், கல்வி முதலியவற்றுக்காகவும் நீங்கள் பணம் தர வேண்டும்.

று குறிப்பிட்டு அனுப்பலாம். kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம்.
யவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கு எஸ்.எம்.எஸ்.செய்யலாம்.



**முதலில் நான் ஜோதிகாவின் ரசிகன். அப்புறம்தான் காதலன், கணவன் என்பதெல்லாம்...**

தமிழ்த் திரையின் ஸ்டைலிஷ் ஹீரோ யார்னு எலெக்‌ஷன் வெச்சா அதில் சூர்யாதான் சீஃப் மினிஸ்டர். அந்தளவுக்குப் பெண் ரசிகைகளின் இதயத்தில் ஸ்டார் சிம்மாசனம். ராம்கோபால் வர்மாவின் இயக்கத்தில் 'ரத்த சரித்திரம்' படம் மூலமாக பாலிவுட்டையும் கலக்க இருக்கும் சூர்யா கல்கி தீபாவளி ஸ்பெஷலுக்காகத் தன் சக்ஸஸ் கிராஃப் குறித்து நெகிழ்வோடு பேசுகிறார்.

**கௌதமுக்கு நன்றி :** 'நந்தா' மூலமாக இயக்குநர் பாலா தான் சினிமா உலகத்தின் கவனத்தை என் மீது குவிய வைத்தார். அடுத்த படம் 'காக்க காக்க'. அதற்கு முன்பு இருந்த சூர்யாவுக்கும், அதற்கு அப்புறமான சூர்யாவுக்கும் நிறைய வித்தியாசங்கள். பெரிய ஹீரோ ஆனது ; படங்களின் வீச்சு; பிசினஸ் அதிகரிப்பு; பன்மடங்கு ரசிகர்கள் என்று அப்புறம் நடந்ததெல்லாம் ஸ்வீட் மேஜிக்; இரண்டு சூர்யாவையும் ஒப்பிடுங்கள் என்றால், 'அதற்கு நான் டைரக்டர் கௌதமுக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும். அதன் பிறகுதான் சூர்யா ஸ்லீக்கான, ஸ்டைலான ஒரு ஹீரோ என்று அங்கீகாரம் கிடைத்தது. ஒரு வெற்றி தருகிற நம்பிக்கை, நம்மை அடுத்த வெற்றியை நோக்கிச் செலுத்தும். முழுமையான ஈடுபாட்டுடன், நம் உழைப்பைக் கொடுக்கிறபோது, வெற்றி கிடைக்கிறது; அந்த நம்பிக்கையோடு உழைக்கிறேன்.

**டீம் ஒர்க்கை நம்புகிறேன் :** சம்பளத்தை வாங்கிக்கொண்டு, டைரக்டர் சொல்லுவது மாதிரி நடித்துக் கொடுத்துவிட்டால் என் கடமை முடிந்தது என்று நினைக்காமல், சினிமா உலகில் இருக்கும் திறமைசாலிகளையும் இணைத்துக்கொண்டு, பணியாற்றினால், படம் இன்னும் சிறப்பாக வரும். சூர்யா என்ற பெயருக்காகப் படத்தை பிசினஸ் பண்ணுவதைவிட, திறமையான டீம் உழைத்துக் கொடுத்திருக்கும் படம் என்ற அடிப்படையில், எல்லாத் தரப்பினரும் ரசிக்கும்படியாகப் படம் பண்ண வேண்டும். இன்று தமிழ் சினிமாவில் ஒரு முக்கியமான இடத்தில் நான் இருக்கிறேன். விரும்பினாலும், விரும்பாவிட்டாலும், படத்துக்குப் படம் பிசினஸ் பெரிதாகிக்கொண்டே போகிறது. ஒரு சிம்பிளான கதையாக இருந்



# ஜோதிகாவுக்கு முன் பின்

## - சூர்யா சீக்ரெட்

தாலும், அதைச் சின்ன பட்ஜெட்டில் எடுக்காமல், பெரிய பட்ஜெட்டில் எடுக்க வேண்டி இருக்கிறது. அதற்கேற்ப கதையிலும், தயாரிப்பிலும் அழுத்தமும், ரிச்னஸும் இருக்கும்படி பார்த்துக்கொள்கிறேன். சூர்யாவின் ஒவ்வொரு படமும் ஒரு விதத்தில் ஸ்பெஷல் என்று பேசப்படும்படி படம் இருக்க வேண்டும் என்று கவனத்தை எல்லாம் அதில்தான் செலுத்துகிறேன்.

**ஆக்ஷன் ஹீரோதான்; ஆனாலும் :** நான் ஆக்ஷன் ஹீரோதான். என் படத்திலும் சண்டைக் காட்சிகள் இடம்பெற்றாலும்கூட அவற்றில் கோரமாக, அருவருப்பு ஏற்படும்படியாக ரத்தம் தெறிக்காது. ஆனால் சினிமாவைவிட இன்று நிஜத்தில் கோரமான படுகொலைகள் நடுரோட்டில் நடக்கின்றன. துண்டிக்கப்பட்ட தலையின் படத்தைப் பேப்பரில் போடுகிறார்கள்; டி.வி.யில் காட்டுகிறார்கள். இவை தவிர்க்கப்பட வேண்டும். இல்லைன்னா சமூகப் பொறுப்பு கேள்விக்குறிதான்!

**நோ செகண்ட் டேக் :** 'என்னுடைய டைரக்டர்கள் எல்லாரும் என் வளர்ச்சிக்கு ரொம்ப உதவி இருக்காங்க. நானும் என் திறமையை முடிஞ்ச வரைக்கும் வளர்த்துக்கிட்டிருக்கேன். இன்னும் நிறையக் கத்துக்க வேண்டியது இருக்கு. ஷூட்டிங்ல ரெண்டாவது டேக் போகிறபோது, ஏன் நம்மால முதல் டேக் ஓகே வாங்கற மாதிரி நடிக்க முடியலைன்னு கேள்வி அழுத்தும். டான்ஸ் சீன்ல டான்ஸ் மாஸ்டரோட அசிஸ்டன்ட் நல்லா மூவ்மென்ட்ஸ் கொடுத்தா, நாமளும் அதைவிட நல்லா டான்ஸ் ஆடணும்னு தோணுது. சில படங்களைப் பார்க்கிறபோது, இன்னும் நாம போக வேண்டிய தூரம் நிறைய இருக்குன்னு தோணுது. நான் எதிர்பார்த்ததைவிட பல மடங்கு அதிகமா எனக்கு இப்போ அங்கீகாரம் கிடைச்சிருக்கு. ஆனா முழு திருப்தி இல்லை.



**டானிக் :** சூர்யா படத்தைக் குடும்பத்தோட போய் ரசித்துப் பார்க்கலாம் என்று ஒரு நல்ல டிரெண்ட் உருவாயிருக்கறது பாக்கியம்தான். அது எனக்குள் டானிக் மாதிரி எனர்ஜி கொடுக்குது.

**என் ஃபார்முலா :** 'வெற்றியைப் பார்த்து, சந்தோஷப்பட்டு உட்கார்ந்துவிடக்கூடாது. வாரணம் ஆயிரம், அயன், ஆதவன், சிங்கம்... என்று வெற்றிக்காக ரெண்டு, மூணு நாள் சந்தோஷப்படலாம். அதற்கு அப்புறம், அடுத்த வெற்றி இலக்கை நோக்கி ஓட்டத்தை ஆரம்பிக்க வேண்டியதுதான். வெற்றிக்கு மட்டுமில்லை; தோல்வியானாலும் இதே ஃபார்முலாதான்.

**ஜோதிகா :** முதலில் நான் அவரது ரசிகனாக இருந்தேன்; அப்புறம் நண்பன் ; பிறகு காதலன் ; இப்போது கணவன்-மனைவி. அவரை மும்பைப் பெண் என்றே சொல்ல முடியாது; அவரிடத்தில் ஒரு தாயின் பார்வையையும், சகோதரியின் அன்பையும் பார்க்கிறேன். எந்த ஒரு விஷயமானாலும், அதனைச் சரியான கோணத்தில் பார்த்து ஜட்ஜ் பண்ணுவார். அவர் கோபப்பட்டுப் பார்த்ததில்லை. ரொம்ப பொசசிவ் குணம் கொண்டவர். தன் நண்பர்களை, குடும்பத்தினரை, உறவினர்களை எப்போதும் விட்டுக் கொடுக்க மாட்டார். மிகவும் நெருக்கமான, அன்பைப் பொழியும் அவரது பிறந்த வீடு எனக்கு ரொம்பவும் பிடிக்கும். ஜோ எனது வாழ்க்கையின் நிகழ்ந்த அதிருஷ்டம். திருமணத்துக்குப் பிறகு நான் ரொம்பவும் மாறிட்டேன். அந்த மாற்றங்களுக்குக் காரணம் ஜோதான். தினமும் எங்களுக்குன்னு கொஞ்ச நேரம் ஒதுக்கி, எதுவானாலும் மனசுக்குள்ளயே வெச்சுக்காம, மனம் திறந்து வெளிப்படையா பேசிவிடுகிறோம். அது இரண்டு பேருக்குள்ளேயும் நல்ல அண்டர்ஸ்டாண்டிங்கை ஏற்படுத்தி இருக்கு. எங்க குழந்தைகளுக்கு அம்மாவின் அரவணைப்பு இப்போ அவசியமா இருக்கு. குழந்தை வளர்ந்து பெரிய ஆளா ஆனதும், ஜோ நடிக்க விரும்பினா, நான் நிச்சயம் சப்போர்ட் பண்ணுவேன்.

**குட்டீஸ் :** 'என்னோட கனவை குழந்தைகள் மீது திணிக்க விரும்பவில்லை. அவர்களுக்கு என்னவாக விருப்பமோ, அதுவாக சுதந்திரம் தருவேன். அவர்கள் என்னைவிட, ஜோவைவிட ஸ்மார்ட்டா இருப்பாங்க. அதற்கான எல்லா வழி



**நான் எதிர்பார்த்ததைவிட பல மடங்கு அங்கீகாரம் கிடைத்திருக்கிறது. ஆனாலும், திருப்தி இல்லை.**

களையும் நாங்கள் செய்து தருவோம்.

**கடவுள் அருள்:** சினிமாவுக்கு வராமல் இருந்திருந்தால், இந்தச் சமுதாயத்துக்கு என்னால் பெரிய அளவில் ஒன்றும் செய்திருக்க முடியாது. என் பெற்றோர்களுக்குப் பெருமை சேர்த்திருப்பேன் என்று கூட சொல்ல முடியாது. ஒரு சாதாரண பிரஜையாக ஓர் ரெடிமேட்ட்ரஸ் தொழிற்சாலை நடத்திக்கொண்டு இருந்திருப்பேன். லட்சக்கணக்கான ரசிகர்களையும், என் நலனில் அக்கறை கொண்டவர்களையும் என்னால் நிச்சயம் சம்பாதித்திருக்க முடியாது. இப்போ, அகரம் அமைப்பு மூலமா நிறைய ஏழை மாணவர்களுக்குப் படிக்க உதவ முடிகிறது. பொது சேவை செய்ய முடிகிறது; இந்த நல்ல வாய்ப்பு எனக்குக் கிடைச்சிருக்காதில்லையா? நான் கடவுளுடைய, ஆசிகளைப் பெற்றிருப்பதை நிறைய உணர்கிறேன்.

**புரியாத புதிர்:** சினிமா உலகில் சிலர் நடந்துகொள்கிற முறைதான் எனக்குப் புதிர். வெற்றி, சில பேரை எப்படி மாற்றி விடுகிறது! மிக நெருக்கமானவர்கள்கூட, ஓரிரு ஆண்டுகளில் ரொம்ப மாறிப் போய்விடுகிறார்கள். சில சமயங்களில் நாம் சாதாரணமாக, எந்த விதமான உள்நோக்கமும் இல்லாமல் சொல்கிற விஷயங்களைக் கூட சிலர் ஏன் தப்பாகப் புரிந்து கொள்ளுகிறார்கள். ஒருவர் வெற்றி பெறுகிறபோது ஒரு மாதிரியும், தோல்வி அடைகிறபோது வேறுமாதிரியும் பார்க்கிறார்கள். ரசிகர்கள்கூடப் புதிரானவர்கள்தான். சில படங்களை எதிர்பார்த்ததற்கு மேலாக வெற்றி பெறச் செய்கிறார்கள்; சிலவற்றை எதிர்பார்த்தது மாதிரியே வெற்றி பெறவைக்கிறார்கள்; இன்னும் சிலவற்றைச் சற்றும் எதிர்பாராத அளவுக்குத் தோல்வி அடையச் செய்து விடுகிறார்கள்.

**நெக்ஸ்ட்?:** இந்தியாவின் மிகச்சிறந்த இயக்குநர் ராம் கோபால் வர்மா மூலமாக இந்திக்குப் போவதை ரொம்பப் பெருமையாக நினைக்கிறேன். அது எனக்கு ஒரு புது ஓப்பனிங். இனிய நண்பர் முருகதாஸ்கூட இணைந்து பண்ணும் ஏழாவது அறிவு என்னை இன்னும் ஒரு படி மேலே எடுத்துக் கொண்டு போகும். இஷ்டப்பட்டு உழைக்கும்போது கஷ்டமே தெரியாது என்பதுதான் நான் சினிமாவில் கற்ற பாடம்...

- எஸ். சந்திர மௌலி

அட்டை
மற்றும்
படங்கள்:
வெங்கட்ராம்

**சினிமாவுக்கு வராமல் இருந்திருந்தால் இந்தச் சமுதாயத்துக்குப் பெரிதாக ஒன்றும் செய்திருக்க முடியாது.**

# ஹரிகேசநல்லூர் வெங்கட்ராமன்



# பூஜை அறையில் இறந்தவர் படம்?

**இசக்கிமுத்து, திசையன்விளை**

என் மகள் மோனிகாவுக்குப் பூரம் நட்சத்திரம் சிம்ம ராசி. தற்போது ஒரு நல்ல வரன் வந்துள்ளது. பையனுக்கு மகம் நட்சத்திரம் சிம்ம ராசி. ஒரே ராசி ஆண் - பெண் திருமணம் செய்து கொள்வது தவறா?

பூரம் பெண், மகம் ஆண். பத்துக்கு ஒன்பது பொருத்தம் உண்டு. திருமணம் நடத்தலாம். அவர்களின் திருமண வாழ்க்கை மகிழ்ச்சிகரமாக அமையும். ஒரே ராசி ஆணும் பெண்ணும் திருமணம் செய்து கொள்வதில் தவறில்லை. ஆயிரம் பிறை கண்டு சதாபிஷேகம் செய்து கொள்ளும் தம்பதிகளில் பலருக்கு ஏகராசி இருப்பதை நடைமுறையில் காண்கிறேன்.

**லீலா ராம், தக்கலை.**

பூஜை அறையில் சாமி படங்களுடன் இறந்துவிட்ட குடும்பத்தாரின் படங்களையும் வைத்து வழிபடலாமா?

வழிபடலாம். தூபம், தீபம், சூடம் காட்டலாம், மலர்கள் அணிவிக்கலாம். அதில் தவறே இல்லை.

**வரதராஜ பெருமாள், ஈரோடு.**

கால பைரவர் வழிபாடு செய்யும் முறை என்ன? எத்தகைய தீபம் ஏற்ற வேண்டும்? என்ன மந்திரம் சொல்ல வேண்டும்?

தேய் பிறை அஷ்டமியன்று பைரவர் வழிபாடு செய்வது சிறப்பு. காசியில் உள்ள கால பைரவர் கோயில் மிகவும் புகழ் பெற்றது. இத்தலத்தில் கால பைரவ அஷ்டகம் என்னும் சுலோகத்தை ஆதி சங்கரர் பாடியுள்ளார். பைரவர் என்பது 64 சிவ வடிவங்களுள் ஒன்று. பைரவர்களில் 64 வகை உள்ளது. திருவாவடுதுறை ஆதின நூலகத்தில் பைரவர் வழிபாடு தொடர்பான நூல்கள் உள்ளன. பைரவர் சன்னிதியில் நல்லெண்ணெய் தீபம் ஏற்ற வேண்டும். பைரவருக்கு வடை மாலை சாற்றும் வழக்கம் உண்டு. பைரவர் வழிபாடு செய்தால் தூர்தேவதைகள் அண்டாது. கண் திருஷ்டி விலகும். நவக்கிரக தோஷங்கள் அனைத்தும் நீங்கும். ''ஓம் திகம்பராய வித்மஹே தீர்க சிஷ்ணாய தீமஹி தன்னோ பைரவப் ரசோதயாத்'' என்பது பைரவர் காயத்ரி மந்திரம். ஆகமசார ருத்ர த்ரிசதி சொல்லி வில்வ அர்ச்சனை செய்வது சிறப்பு.

**லஷ்மி கணேசன், சென்னை-20**

போட்டி, பொறாமை, ஆத்திரம், வயிற்றெரிச்சல், முன்கோபம், போன்ற துர்குணம் உடையவர்கள் மனம் திருந்த என்ன வழிபாடு செய்ய வேண்டும்?

ஆதிசங்கரர் துங்கபத்ரா நதிக்கரையில் ஓர் அபூர்வ





காட்சியைக் கண்டார். பிரசவ வேதனையில் கொளுத்தும் வெயிலில் துடித்துக் கொண்டிருந்த ஒரு தவளைக்கு, நாகப்பாம்பு குடை பிடித்து நிழல் அளித்தது. பிறவியிலேயே எதிரிகளான தவளையும் நாகமும் தங்கள் பகைமை உணர்வை மறந்து நட்பு பாராட்டின. இந்த அதிசயத்தைப் பார்த்ததும், அவ்விடத்தின் மகத்துவத்தை உணர்ந்து அங்கேயே அமர்ந்து தவம் புரிந்தார். ஆதி சங்கரர் சாரதா தேவியை தியானம் செய்த இடம்தான் சிருங்கேரி. நீங்களும் சிருங்கேரி சாரதாம்பாளை வேண்டிக் கொள்ளுங்கள். நீங்கள் குறிப்பிடும் நபருக்குத் துர்குணங்கள் மாறும்.

**வி.ஜி.சத்யநாராயணன், சென்னை-61**

**ஆண் மூலம் அரசாளும் என்று சொல்லப்படுவதேன்? மூலம் நட்சத்திரத்துக்கு ஏதேனும் சிறப்பு உண்டா?**

மூலம் என்றால் வேர், ஆதி, துவக்கம், வித்து எனப் பல பொருள் கூறலாம். அனுமானுக்கும் மூலம் ராவணனுக்கும் மூலம். நாடாளும் யோகம் இந்த நட்சத்திரத்துக்கு உண்டு.

அகமுடை செல்வனாகும் ஆயுதம்
பிடிக்கவல்லன்
சுகமுகவசியனாகும் சுற்றத்தார்தமக்கு
நல்லான்
மிகஉயர் கல்வி கற்றும் வேந்தர்க்கும்
இனிய னாகும்
முகமதும் அழகனாகும் மூல நாள்
தோன்றினானே

இந்த மூல நட்சத்திரப் பாடல் தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தில் சுவடியில் உள்ளது. ஆண் மூலம் உயர்வானது என்பதை நிரூபிக்க இதுபோல் பழைய நூல்களில் ஏராளமான ஆதாரங்கள் உள்ளன.

**ராஜரத்தினம், மயிலாடுதுறை**

**நவரத்தினக் கல் அணிவதால் தலை எழுத்து மாறுமா?**

அணிபவருக்கு மாறுமோ மாறாதோ விற்பவரின் தலை எழுத்து நிச்சயம் மாறும். பண மழை கொட்டுகிறதே.

**உங்கள் கேள்விகளை ஜாதகக் குறிப்போடு 'பளிச் பரிகாரம்' என்று குறிப்பிட்டு அனுப்புங்க... kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.**



**சா**தனைகள் பல செய்தாலும், முதல்வர் குடும்ப உறுப்பினர்கள் மீது கூறப்படும் குற்றச் சாட்டுக்களால் கட்சியின் இமேஜ் அடிபட்டு தேர்தல் முடிவுகள் பாதகமாக வந்துவிடுமோ என்ற கவலை தி.மு.க. தலைமையை ஆட்டுவிக் கிறது. அந்தச் சேதத்தைக் குறைக்கும் விதமாகத் தேர்தல் வரையில் திரைப்படத் துறையில் தங்கள் நடவடிக்கைகளைக் குறைத்துக் கொண்டு அடக்கி வாசிக்கும்படி பேரன்கள் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறார்களாம். ''மேலும் மாறன் சகோதரர்கள் செய்யும் தொழி லிலேயே கலைஞரின் பேரன்கள் இறங்குவதும்

# அடக்கி வாசிங்க தம்பிகளா!



### தாமரையின் தடுமாற்றம்

**சி**றுபான்மையோரில் ஏழை மாணவ, மாணவிகளுக்குக் கல்வி உதவித் தொகை கொடுப்பது போல இந்து ஏழை மாணவ, மாணவிகளுக்கும் உதவித் தொகை தரவேண்டு மென்று வலியுறுத்தி, 'தாமரை யாத்திரை' என்ற பெயரில் பிரசாரப் பயணம் நடத்தியிருக்கிறது தமிழக பா.ஜ.க. அயோத்தி விவகாரத்தில்

**பாலிடிக்ஸ் பஜார்**

### சாட்டையை வீசும் சட்டர்ஜி!

**கா**ஞ்சிபுரம் மாவட்ட அரசு ஊழி யர்கள் கலங்கித்தான் போயிருக்கிறார்கள். அவர்களைக் கலக்குபவர் புதிதாகப் பொறுப் பேற்றிருக்கும் மாவட்ட ஆட்சியாளர் சட்டர்ஜி. தாசில்தார்கள் கூட்டம், ஊராட்சி ஆணையர்கள் கூட்டம் என்று போடும் ஆட்சியாளர் தம் கிடுக் கிப்பிடி கேள்விகளால் அதிகாரிகளை பதை பதைக்க வைக்கிறாராம். ''ஒரு தாசில்தாரிடம் எத்தனை பேருக்கு முதியோர் பென்ஷன் வழங்கப்பட்டது என்று கேட்க, அவர் டார்கெட்டுக்குக் குறைவாகச் சொன்னதும், ''உங்களுக்கெல் லாம் பட்டா கொடுப்பதில்தானே பணம் பார்க்க முடியும். உங்கள் அம்மா, அப்பாக்களைப் பற்றி கவலைப்பட்டால் தானே மற்ற முதியோர்களைப் பற்றி அனுதாபம் வரும்'' என்று கடுப்படித்தாராம். மாவட்ட அதிகாரிகள் ரிவ்யூ மீட்டிங் என்றாலே நடுங்குகிறார்கள்.

### ஏச்சுக் கலையை வளர்ப்போம்

**ம**துரையில் கூடிய கூட்டம் ரத்தத்தின் ரத்தங்களை உற்சாகப் படுத்தி உடன்பிறப்பு களை கவலையில் ஆழ்த்தியுள்ளது ஒரு பக்கம் இருக்க, ஜெய லலிதாவின் மதுரைப் பேச்சு சி.டி.க்கள் ஆயி ரக்கணக்கில் விற்பனை யாகின்றன என்கிறார்

குழப்பத்தை உருவாக்கியிருக்கிறது. இதன் எதிரொலியாகத்தான் அழகிரி மகன், சுமங்கலிக்குப் போட்டியாக தொடங்க இருந்த ஜாக்கேபிள் நிறுவனமும் அதிரடி பாய்ச்சல் காட்டாமல் அடக்கி வாசிக்கிறது என்கிறார்கள் கழகப் புள்ளிகள்.

## மருத்துவருக்கு அதிர்ச்சி வைத்தியம்

டாக்டர் ராமதாஸ் சகோதரர் சீனு கவுண்டர் எனப் படும் சீனிவாசன் பா.ம.க. பிரமுகர்களிடையே நன்கு அறிமுகமானவர். பா.ம.க. உட்கட்சிப் பூசல்களைத் தீர்ப்பதற்கும் கட்சியின் நலன்களைப் பாதுகாப்பதற்கும் பின்னணியாக இருந்து செயல்பட்டவர். ஆனால் சமீப காலங்களில் இவர் தொழில் முன்னேற்றங்களுக்கு மருத்துவர் குடும்பம் பல தடைகளைப் போட, நொந்துபோய் விட்டாராம் சகோதரர். தமது மகனுடன் காங்கிரஸில் இணைந்து அரசியல் ஆதரவு தேட முடிவு செய்துவிட்டாராம். அதிர்ச்சியடைந்த மருத்துவர் குடும்பம் இதைத் தடுக்க முயற்சி செய்கிறது. 'பா.ம.க.வுக்கு அடித்தளமாக உள்ள பல சட்டமன்றத் தொகுதிகளில் எங்களைப் பலவீனப் படுத்தும் சக்தி சீனிவாசனுக்கு உண்டு' என்று ஒப்புக்கொள்கிறார்கள் பா.ம.க. பிரமுகர்கள்.



ஆர்வம் காட்டாத தமிழக மக்களின் ஆதரவை பெறும் யுக்தியாம் இது. 'ஆனால், இந்த அணுகுமுறை தவறு. இந்து சமூகத்தைச் சேர்ந்த பிற்படுத்தப்பட்ட, மிகவும் பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட, மலைவாழ் மக்களில், 358 பிரிவுகளில் உள்ள மாணவ மாணவிகளுக்கு உதவித் தொகை வழங்கப்பட்டு வருகிறது. ஆனால், முற்பட்ட வகுப்பில் உள்ள ஏழு பிரிவினருக்குத்தான் உதவித் தொகை கிடையாது. எனவே, 90 சதவிகிதம் இந்து மாணவர்கள் பயனடைந்து வரும் நிலையில் முற்பட்ட வகுப்பில் உள்ள ஏழை, மாணவ, மாணவிகளுக்கு உதவித் தொகை வேண்டும்' என்று போராடுவதே சரியான அணுகுமுறையாக இருக்கும். இல்லையேல் நோக்கம் நீர்த்துப் போகும்'' என்கிறார்கள் பிராமண சங்க பிரமுகர்கள்.

கள். ''அ.தி.மு.க. கூட்டம் தொடங்குவதற்கு முன் அம்மாவின் பேச்சைப் போட வேண்டும்'' என்று உத்தரவாம். ஒரு காலத்தில் ஜெயலலிதாவின் பேச்சுக்களைத் தயார் செய்து, அவருக்கு அரசியல் நெளிவுசுளிவுகளைச் சொல்லிக் கொடுத்தவர் சோலை. இப்போது தி.மு.க. ஆதரவாளராக, குறிப்பாக ஸ்டாலின் ஆதரவாளராக மாறிவிட்ட சோலை, ஒரு கட்டுரையில், 'ஜெயலலிதாவின் மதுரைப் பேச்சு குற்றச் சாட்டுக்களின் தொகுப்பாக இல்லாமல் கோர்வையாகவும், நேர்த்தியாகவும் அமைந்த பேச்சு' என்று பாராட்டியிருக்கிறார்! ''அம்மா பேச்சின் ஸ்பெஷாலிட்டி குட்டிக் கதைகளும் அந்த இடத்தின் புராதன, தொன்மைச் சிறப்புகளைப் பேசுவதும்தான்'' என்கிறார்கள் அ.தி.மு.க. புள்ளிகள்.

- சஞ்சயன்



## 31.10.2010 முதல் 06.11.2010 வரை

### தஞ்சை பரத்வாஜ்




நினைத்த காரியங்கள் ஈடேறும். திருமணப் பேச்சுவார்த்தை பலன் அளிக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். இல்லற வாழ்வு இனிதாக இருக்கும். குழந்தைகளால் மன சந்தோஷம் மிகுதியாகும். உத்தியோகத்தில் ஊதிய உயர்வு, பதவி உயர்வு ஏற்படும். உடன் பிறந்தவர்களால் அனுகூலம் ஏற்படும். வழக்கு, வியாபாரம் வெற்றி பெறும். கொடுக்கல் வாங்கலில் இருந்து வந்த சிக்கல் தீரும்.




மனத்துக்கு இனிய நிகழ்ச்சிகளில் பங்கெடுத்துக் கொள்வீர்கள். உடல்நிலை பூரண குணமாகும். கொடுக்கல் வாங்கலில் இருந்து வந்த சிக்கல் தீரும். கூட்டாளிகளை விட்டுப் பிரிந்து தனிப்பட்ட தொழில் தொடங்க வேண்டிய காலம் வந்தாச்சு. ராகு/கேதுவை வழிபட்டு வர சிரமத்திலிருந்து விடுதலை பெற நேரிடும்.




மிகவும் உன்னதமான பலனை எதிர்பார்க்கலாம். சுபச் செலவு ஏற்படும். வாகனம் வாங்கும் யோகம் கிட்டும். தூர தேச அழைப்பு வந்து சேரும். கடன்சுமை விலகும். மனத்தில் சந்தோஷம் மிகுதியாகும். உடன் பிறந்தவர்களால் அனுகூலம் ஏற்படும். சொத்து வாங்கும் யோகம் கிட்டும். குழந்தைகளால் ஆதாயம் கிட்டும். உடல் நிலை பாதிக்காது. செலவுகள் சுபமானதாக இருக்கும். கல்வி வளம் மேலோங்கும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி உண்டாகும்.




தேர்வில் நல்ல மதிப்பெண்கள் பெற்று பாராட்டைப் பெறுவீர்கள். கடன் சுமை குறைய ஆரம்பிக்கும். வேலையில் இடமாற்றம் ஏற்படும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். பொருளாதாரச் சிக்கல் தீரும். உறவினர் வருகை மனத்துக்கு சந்தோஷத்தை அளிக்கும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். தொழில் துறையில் நல்ல முன்னேற்றம் தெரிய ஆரம்பிக்கும். மனசஞ்சலம் தீரும். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும்.




உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். பணம் பலவழிகளில் வந்து சேரும். கடன் பிரச்னை தீரும். புதிய தொழில் தொடங்க ஏற்ற தருணம். படிப்பில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். கணவன் மனைவி உறவு நன்றாக இருக்கும். வழக்கு வெற்றி பெறும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. கூட்டாளிகள் விட்டு விலகிச் செல்ல நேரிடும்.




வாக்குவாதம் தவிர்ப்பது நல்லது ஆரோக்கியத்தில் கவனம் செலுத்தவும். படிப்பில் அக்கறை எடுத்துப் படித்து வருதல் நலம் தரும். மறைமுகச் சத்ருக்கள் இருப்பார்கள். வேலைப் பளு அதிகரிக்கும். வியாபாரத்தில் சற்று மந்தமான சூழ்நிலை ஏற்படும். புதிய தொழில் முயற்சியைச் சற்று தள்ளிப் போடவும். வழக்கு தாமதம் ஆகும். கணவன் - மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. ராகு/கேது/சனி/குருவை வழிபட்டு வர சங்கடங்கள் தீரும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!




திடீர் சுபச் செலவு ஏற்படும். கடன் சுமையிலிருந்து விடுதலை கிட்டும். நீண்ட தூரப் பிரயாணம் வந்து சேரும். அநாவசியமான செலவுகளைத் தவிர்க்கவும். திருமண காரியம் கைகூடும். வழக்கு வியாபாரம் வெற்றி அளிக்கும். குழந்தைகளால் மன சந்தோஷம் கிட்டும். ஆடை ஆபரணப் பொருட்கள் சேரும். உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும்.




கடன் பிரச்னை தலை விரித்து ஆடும். யாருக்கும் ஜாமீன் போடுவதைத் தவிர்க்கவும். இல்லற வாழ்வில் சற்று மனவருத்தம் ஏற்படக்கூடும். படிப்பில் அதிக கவனம் எடுத்துப் படித்து வருதல் பயன் தரும். வர வேண்டிய பணம் வந்து சேரும். ராகு/கேதுவை வழிபட்டு வர நற்பலன் உண்டாகும்.




திருமணத் தடை விலகி திருமணம் கைகூடும். வேலைப் பளு குறையும். புதிய பணி தேடி வரும். வீடு மாற்றம் ஏற்படும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். நீண்ட தூரப் பிரயாணம் தேடி வரும். ஆரோக்கியம் சீராகும். கணவன் மனைவிக்குள் அனுசரித்து நடந்து கொள்வது நல்லது. வழக்கு வெற்றி அளிக்கும். வராத நிலுவைகள் வந்து சேரும். செலவுகள் கட்டுக்கடங்கி இருக்கும். குழந்தைகளால் மன நிம்மதி ஏற்படும்.




தந்தை வழிச் சொத்து வந்து சேரும். வேலையில் பதவி உயர்வு கிட்டும். கடன் சுமை தீரும். பூமி வாங்கும் யோகம் கிட்டும். செலவுகள் சுபமானதாக இருக்கும். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். உறவினர் மூலம் நல்ல தகவல் வந்து சேரும். வழக்கு வெற்றி பெறும். பணக் கஷ்டம் இருக்காது. கடல் கடந்து செல்லும் யோகம் அமையும். கல்வியில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். இல்லற வாழ்வு மகிழ்ச்சியுடன் இருக்கும்.




நெருங்கிய கூட்டாளிகளை விட்டுப் பிரிந்து செல்ல நேரிடும். வீடு மாற்றம் ஏற்படும். நீண்டகாலக் கடன் தொல்லை நீங்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். வழக்கு தாமதம் ஆகும். புதிய ஆபரணச் சேர்க்கை உண்டாகும். ராகு/கேது/சனியை வழிபட நற்பலன் உண்டாகும்.




தொழில் துறையில் இடமாற்றம் உண்டாகும். மறைமுக எதிர்ப்புகள் ஏற்படும். வேலைப்பளு அதிகரிக்கும். குழந்தைகள் வழியில் சுபச் செலவு ஏற்படும். கடன் சுமை குறையும். பூமி மூலம் ஆதாயம் கிட்டும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். கணவன் மனைவி உறவு நன்றாக இருக்கும். வியாபாரத்தில் லாபம் கிட்டும். பணப் பிரச்னை தீரும். தடை விலகித் திருமணப் பேச்சுகள் பலன் அளிக்கும். வீடு மாற்றம் உண்டாகும். ராகு/கேது/சனியை வழிபட்டு வர நற்பலன் உண்டாகும்.




'பட்ரே...' தோள்ல தட்டினார் மேனேஜர். தாஜ் கோரமண்டல் சதர்ன் ஸ்பைஸோட நீள கிச்சன்ல கரண்டிகள் மோதிக்கொண்டு இருந்தன. மேலே குட்டிக் குட்டியாகப் புகை மேகம். வெள்ளை ஏப்ரனோடு டொக் டொக் ஷூக்களின் அவசர ஒலி. கற்கண்டு சைஸில் பொடிப் பொடியாகும் வெங்காயம். ஒரு பக்கம் ஏதோ ஒரு ஜந்து வாணலியில் சொய்யென்று திரும்ப; இன்னொரு பக்கம் பீங்கான் தட்டுகள் இடித்துக்கொண்டன.

சதர்ன் ஸ்பைஸ் ஷெஃப்பான பிறகு, மேனேஜர் வந்து கூப்பிட்டதில்லை. அப்பதான் கேட்டரிங் படிச்சுட்டு, டிரெய்னி ஷெஃப்பா சேர்ந்தாபோல இருந்தது. திரும்பிப் பார்க்கறதுக்குள்ள இரண்டு வருஷம் ஓடிப் போயிடுச்சு. கூடப் போறேன்.

ஒருத்தர் முன்னால நின்னு, ''இவர்தான் எங்க சீஃப் ஷெஃப் வெங்கடேஷ் பட். உங்ககிட்ட இவர் ஆர்டர் எடுத்துப்பார்''ன்னு சொல்றார். பனிச் சென்று மின்னல் வெட்டினா போல், முகம் முழுக்க புன்னகையோட, அவர் எழுந்து நிற்கிறார். கூடவே அவர் மனைவி, மகள்கள் எழுந்து நிக்கறாங்க. நான் ஆடிப்போய்ட்டேன். நானோ சின்னப் பையன். எழுந்து நிற்கிறதோ, தமிழகத்தின் சூப்பர் ஸ்டார். லதாம்மா மலர்ந்து சிரிக்கறாங்க. மகள்களெல்லாம், துடைச்சு வெச்ச பீங்கான் பொம்மைகள் மாதிரி பளபளக்கறாங்க.

சூப்பர் ஸ்டார் விசாரிக்கிறாரு. நான் என்னவோ சொல்றேன். என்ன கேட்டார், என்ன சொன்னேன்? எதுவுமே ஞாபகம் இல்லை. பதினாலு வயசு பையனா அவர் வீட்டுக்குப் போனது மட்டும் ஞாபகம் வருது. அப்போ எல்டாம்ஸ் ரோடு கார்னர்ல 'சலூன் அம்புலி'ன்னு ஒரு கடை இருக்கும். அங்க சூப்பர் ஸ்டார் முடி வெட்டிக்க வருவாராம். நானும் அங்க முடி வெட்டிக்குவேன்.

நான் ரஜினியோட அதிதீவிர ரசிகன். அப்போ என்னோட ஆசையெல்லாம் ரஜினிகிட்ட ஆட்டோகிராஃப் வாங்கறது தான். சலூன்காரர் என்னை, ரஜினி வீட்டுக்குக் கூட்டிக்கிட்டுப் போனார்.



ரஜினி இல்லை. ஏதோ ஷூட்டிங். லதாம்மா ஆட்டோகிராஃப் போட்டுத் தந்தாங்க.

ரஜினி ஆர்டர் சொல்றார்: வீட்டுல செய்யற ருசியோட கோழி மிளகு கறி, இடியாப்பம், பாயா. லதாம்மா முழு வெஜிடேரியன். பிசிபேளாபாத்தான் அவங்க



# இலை போட்டாச்சு!

ஃபேவரிட். அவரோட பெண்களும் ஆர்டர் சொல்றாங்க.

அன்னிக்கு ஆரம்பிச்சது. கிட்டத் தட்ட அஞ்சு வருஷம். ரஜினிக்கும் அவர் குடும்பத்துக்கும் முப்பது நாற்பது முறைகள் நான் உணவு பரிமாறியிருப்பேன். ஒவ்வொரு முறையும் அவரோட ஃபேவரிட் ஐட்டங்கள் மாறியதில்லை. மின்னல்வெட்டுச் சிரிப்பு மாறியதில்லை. ஒவ்வொரு முறையும் அவரும் அவர் குடும்பமும் எழுந்து நிற்பது மாறியதில்லை.

**பொ**துவா ராத்திரி 11.30 மணிக்கு மேலதான் ரஜினி குடும்பத்தோட வருவாரு. அமைதி விரும்பி. ஒரு நாள் அவர் டேபிளுக்குப் பின்னாடி ஒரு பெரியவர் உட்கார்ந்திருந்தார். அவருக்கு அன்னிக்கு எண்பதாவது பிறந்த நாள். பன்னிரண்டு மணிக்கு, கேக் வெட்டி செலிபரேட் செய்ய, அவர் குடும்பம் காத்திருந்தது. தூரத்துல ரஜினி இருப்பது பெரியவருக்குத் தெரிஞ்சது.

'ரஜினியோட ஒரு ஃபோட்டோ எடுத்துக்க முடியுமா'ன்னு அந்தப் பெரியவர்

**சூப்பர் ஷெஃப் வெங்கடேஷ் பட்**





கேட்டார். ரஜினி மிட்நைட்ல வர்ரதே, தொல்லை கூடாதுங்கறதுக்குத்தான். ஒத்துப் பாரோ மாட்டாரோ? ரஜினிகிட்ட போய் விஷயம் சொன்னேன், 'உங்களுக்கு விருப்ப மில்லைன்னா வேண்டாம்.'

'எங்கே அவங்க...' டேபிளைக் காண்பிச் சேன். 'வாங்க.' சரசரவென ஸ்பீடு நடை... பின்னாடியே அவர் ஃபேமிலியும். பெரிய வரும் அவர் குடும்பமும் அதை எதிர்பார்க் கலை. இருபது நிமிஷம் அங்கேயே இருந் தார். எல்லோரிடமும் கைகொடுத்து, குடும் பத்தைப் பத்தி விசாரிச்சு, கேக் வெட்டி, கிளாப்ஸ் தட்டி, ஒரு சின்ன கேக் துண்டையும் சாப்பிட்டு, ஃபோட்டோ எடுத்துக்கொண்டு, அத்தனை பேரையும் திக்குமுக்காடிப் போக வெச்சார்.



சென்னை ஓட்டல் தாசப்பிரகாஷ் குடும்பத்தில் வந்தவர் வெங்கடேஷ் பட். தாஜ் கோரமண்டல், பெங்களூர் லீலா பேலஸ் ஆகிய உணவகங்களில் தலைமை ஷெஃப்பாக இருந்தவர், இப்போது த்ரீ சௌத் இண்டீஸ் என்ற உணவகங்களின் சி.இ.ஓ.வாக இருக் கிறார்.

அன்னிக்கு ராத்திரி அந்தப் பெரியவர் கெஸ்ட் புக்குல இப்படி எழுதினார்: 'இது தான் என்னோட முதல் பர்த்டே. வாழ்க் கையே புதுசா மாறிடுச்சு.'

ஒரு நாள் ராத்திரி ரஜினி ரெஸ்டாரண்ட் வந்தார். போய் நின்னேன். 'பட், நீங்க பாயா கறி நல்லாதான் பண்றீங்க... ஆனா...' இன்னொரு பெரிய ரெஸ்டாரண்ட் பேரைச் சொல்லி, 'அங்க கிடைக்கற பாயா கறி இன்னும் டேஸ்டா இருக்கு...போய்ப் பாருங்களேன்'ன்னார்.

சுருக்குன்னு தெச்சுது. அவர் ஆர்டர் பண்ண முக்கால் மணி ஆகும்னு எனக்குப் பட்டது. பைக்கை எடுத்துக்கிட்டு சூப்பர் ஸ்டார் சொன்ன ரெஸ்டாரண்ட் போனேன். பாயா கறி பார்சல் வாங்கி, நேரா எங்க ரெஸ்டாரண்ட் கிச்சனுக்கு வந்தேன். எங்க ஷெஃப்புங்ககிட்ட கொடுத்தேன். அவங்க அதைத் தொட்டு டேஸ்ட் பண்ணிப் பார்த் தாங்க.

அடுத்த பதினைந்தாவது நிமிடம் சூப்பர் பாயா கறி ரெடி. ரஜினிகிட்ட ரெண்டையும் வெச்சோம். எது எங்களோடது, எது வாங்கி வந்ததுன்னு சொல்லலை. 'எது நல்லா இருக்குன்னு சொல்லுங்க சார்'ன்னு கேட்டோம். ரெண்டையும் சுவைத் தார். பளிச்சுன்னு பல்ப் எரிஞ்சுது.

இதுதான்யா சூப்பர்'ன்னு எங்க தயாரிப்பைக் கொண்டாட ஆரம்பிச்சார்.

அப்புறமாதான், வெளியே போய் வாங்கி வந்த விஷயத்தைச் சொன்னேன். அப்படியே கட்டிப் பிடிச்சுக்கிட்டார். இத்தனைக்கும் இன்னி வரைக்கும் என் நாக்குல ஒரு துளி மாமிசம் பட்டதில்லை. ஒரு தேர்ந்த ஷெஃப்பா தோளைத் தட்டிக்கொண்டது அப்போதான்.

ஒரு சமயம், நியூயார்க் பொங்கல் ரெஸ்டாரண்டுக்கு 4000 டாலர் சம்பளத்துக்கு ஷெஃப்பா கூப்பிட்டாங்க. அப்போ ஹெச்1பி விசா வாங்கறது ரொம்ப கஷ்டம். ரஜினி கிட்ட சொன்னேன். பொறுமையா கேட்டவர், உடனே, ''பட், அமெரிக்கன் கான்சிலேட்டுக்குப் போங்க. அங்க ஒருத்தரை எனக்குத் தெரியும். நான் அவர்கிட்ட பேசறேன். உங்களுக்கு நான் கேரண்டி தரேன். விசா ரெடி பண்ணலாம்''னார்.

2001 ஜனவரி 15 - அமெரிக்கன் கவுன்சிலேட்டுல விசா இண்டர்வியூ. ஜனவரி 14 ஆம் தேதி எங்கம்மா ராதா பட் மைசூரில் இருந்து வரும்போது ரயில் ஆக்ஸிடெண்டுல இறந்துட்டாங்க. நான் அலறி அடிச்சுக்கிட்டு ஓடினேன். எல்லாம் முடிஞ்சு போச்சு. விசா இண்டர்வியூவும் போக முடியலை.

அம்மாவோட காரியங்களை முடிச்சுட்டு, மொட்டை போட்டுக்கிட்டு, பிப்ரவரி மாசம் வேலைக்கு வந்தேன். அன்னிக்கு ராத்திரி ரஜினி வந்தார். மேனேஜர் எல்லா விஷயத்தையும் சொன்னார். என்னால், விசா இண்டர்வியூவுக்குப் போக முடியலைங்கறதையும் சொன்னேன். அவர் கண்ணு கலங்கிப் போச்சு. சட்டுன்னு சமாளிச்சுக்கிட்டு, 'கவலையே படாதீங்க பட். India needs you... அதனால், உங்க அம்மா உங்களை அமெரிக்கா போகவுடாம தடுத்திருக்காங்க...டோண்ட் வொர்ரி'ன்னார்.

அந்த நல்ல மனசு, வாய் முகூர்த்தம் யாருக்கு வரும்? அதுக்கப்புறம் அமெரிக்கா வரச்சொல்லி நாற்பதுக்கும் மேல ஆஃபர் வந்துது. இன்னி வரைக்கும் நான் போகல. ரஜினி சார் வாய் முகூர்த்தம் பலிக்காம போயிடுமா என்ன? இப்போ சொந்தமா எட்டு ரெஸ்டாரண்டு வெச்சிருக்கேன். ஜாம்ஜாம்னு இருக்கேன். இன்னொரு வாய் முகூர்த்தக்காரர் யார் தெரியுமா? நந்தன் நீல்கேணி. அவரைப் பத்தி அடுத்த வாரம்!

(தொடரும்)

## கிச்சன்.காம்

### பிசிபேளாபாத்

**தேவையானவை:** சாதம் - 1.5 கப், துவரம்பருப்பு - 1/5 கப், கொஞ்சம் கேரட், வெங்காயம், சிட்டிகை மஞ்சள்பொடி, சிவப்பு மிளகாய் - 6, பச்சை மிளகாய் - 4, கடுகு - 2 டீஸ்பூன், முந்திரி - 20 கிராம், புளி - சின்ன உருண்டை, தேவைக்கேற்ப உப்பு, கறிவேப்பிலை, கொத்தமல்லி, வதக்க - நெய்.

**பொடிக்க:** வெந்தயம் - 1 டீஸ்பூன், தனியா - 1 டீஸ்பூன், ஆறு சிவப்பு மிளகாய், தேங்காய் தேவைக்கேற்ப துருவியது.

**மசாலா:** ஏலக்காய் - 4, லவங்கம் 4, சோம்பு - ½ டீஸ்பூன், கசகசா - 1 டீஸ்பூன், பட்டை - சிறிய துண்டு.

**செய்முறை:** வெங்காயத்தையும் காய்கறிகளையும் சிறு துண்டுகளாக நறுக்கவும். அரிசியைக் கழுவி, பருப்புடன், சிட்டிகை மஞ்சள் பொடியோடு, நறுக்கிய காய்களோடு தண்ணீர் விட்டு வேகவைக்கவும். வாணலியில் சிறிது எண்ணெய் விட்டு, பொடிக்க வேண்டியதை வறுக்கவும். மசாலாவையும் அதேபோல் வறுத்துப் பொடிக்கவும். புளியைக் கரைத்து வைத்துக்கொள்ளவும். வாணலியில் எண்ணெய்விட்டு, கடுகு, கறிவேப்பிலை, பச்சை - சிவப்பு மிளகாய்கள் ஆகியவற்றைத் தாளித்து, கடுகு வெடித்தவுடன் சாதத்தைச் சேர்த்து நன்கு கிளறவும். கூடவே புளிக் கரைசல், உப்பு ஆகியவற்றைச் சேர்க்கவும். நெய்யில் வறுத்த முந்திரியை, இந்தச் சாதத்தில் சேர்க்கவும். கூடவே அரைத்து வைத்த பொடியையும் மசாலாவையும் சேர்த்துக் கிளறவும். மேலே கொத்தமல்லி தழைகளைத் தூவி, கொஞ்சம் நெய்யையும் விட்டு, பரிமாறவும்.

ஈஸி போட்டி சிஸ்கி சாரி!

# செப்டெம்பர் மாதத்துக்கான



# பட்டுப்புடைவைப் போட்டி முடிவு!

ஊர்வசி எழுதும் 'காலை எழுந்தவுடன் சிரிப்பு' தொடரில் இடம்பெற்ற போட்டியில் பங்கேற்ற ஆயிரக்கணக்கான வாசகர்கள் அனுப்பி இருந்த விடைக் குவியல்களில் இருந்து சரியான விடையை எழுதியவர்களைத் தேர்வு செய்து, பின்னர் குலுக்கல் முறையில் மூன்று வாசகர்களை அதிர்ஷ்டசாலிகளாக அறிவித்து அவர்களுக்குத் தலா ஒரு பட்டுப் புடைவை வீதம் பரிசளிக்கப்படுகிறது.

தொடரில் கேட்கப்பட்ட கேள்விகள்...

**1. ஓட்டந்துள்ளல் கலையை உருவாக்கியவர் யார்?**

**2. ஊர்வசி சிபாரிசு செய்யும் 'முதல் சபதம்' என்ற கதை யாருடையது?**

**3. பொருளாதார சுதந்திரம் பொறுப்பின்மையைத் தந்தது என்று சொன்னது யார்?**

**4. ஜோடி நெம்பர் ஒன்-னின் திருமணம் தடைப்பட்டது ஏன்?**

*விடைகள்:*

*1. குஞ்சன் நம்பியார் 2. ஆஷா பூர்ணா தேவி 3. பிரமிள் 4. பெண் வேலைக்குப் போகக் கூடாது.*

## செப்டெம்பர் மாதத்துக்கான பட்டுப் புடைவைகள் பரிசு பெறும் அதிர்ஷ்டசாலிகள்:

1. ஜீ.ஸ்ரீவர்ஷினி, திருவண்ணாமலை
2. கோ.அக்ஷயா, தஞ்சாவூர்
3. எல்.சிந்துஜா, சென்னை

**பங்கேற்ற வாசகர்களுக்கு நன்றிகள்...! பரிசு பெற்றவர்களுக்குப் பாராட்டுகள்!**

# மைலாப்பூர் B.M. சில்க் சாரீஸ் வழங்கும்










## ஸ்பெஷல் பேன்ஸி ஓர்க் டிசைன் சேலைகள்

ரூ. 750 முதல் ரூ. 25000 வரை

மற்றும் பல புதிய ரகங்கள்

9am to 9pm | Open on all Sundays

All Credit & Debit Card acceped



சில்க் மார்க் அங்கீகாரம் பெற்ற மைலாப்பூரில் உள்ள ஒரே ஸ்தாபனம்

# B.M. சில்க் சாரீஸ்

எண். 9, வடக்கு மாட வீதி, மைலாப்பூர், சென்னை - 4. போன்: 2461 2799, 2464 2799





## வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்

*அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்*
*ஸ்ரீ கோவிந்த தீக்ஷித புண்யஸ்மரண ஸமிதி* (Regd.)

"ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகாஸ்தானம்"

29-30 East Iyen Street, Kumbakonam, Thanjavur Dt. Tamil Nadu-612 001. India.

E-mail:rajavedapatasala@dataone.in Website:www.rajapatasala.in

☎ Off: (0435) 2425948 2401789
Patasala: 2401788 2422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு, பராமரிப்புச் செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதையர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 467 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 210 மாணவர்களுக்கு 20 வேத, சாஸ்திர அத்யாபகர்கள் புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்லயஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். புதிய பாடசாலை கட்டிடம் **ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகா ஸ்தானம்** என பெயரிடப்பட்டு 21.6.2004 திங்கள்கிழமை **ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்** திறந்து வைத்து வேத அபிவிருத்திக்கு அர்ப்பணித்தார்.

| தங்கள் கடிதத்தில் தங்கள் போன் (with STD Code) மொபைல் எண்ணை குறிப்பிடும்படி கேட்டுக் கொள்கிறோம்.<br>நன்கொடை திட்ட விவரங்கள் | நன்கொடை தொகை | நிரந்தர வைப்பு நிதி "Corpus Fund" |
|---|---|---|
| ஒருவேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை) | Rs.700/- | Rs.9,000/- |
| Special Samaradhana | Rs.2500/- | Rs.30,000/- |
| Rice & Dhal | Rs.1,600/- | Rs.20,000/- |
| வேதம் பயிலும் ஒரு மாணவனின் பராமரிப்பு ஒரு மாதச் செலவு ரூ.1000/- | Rs.12,000 P.A. | Rs.1,50,000/- |

நன்கொடைக்கான தொகையை Cross செய்யப்பட்ட D.D/ Cheque-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

2011 - 2012 கல்வி ஆண்டிற்கான வித்யார்த்திகள் சேர்க்கைக்கு முன் பதிவு துவங்கப்பட்டுள்ளது. பதிவு செய்ய முந்துங்கள்



**'சிறுத்தை' ஷூட்டிங்கில் இருந்த கார்த்தியிடம், சூர்யா ஸ்பெஷலுக்காகப் பேசணும் என்று சொன்னதும், சிறுத்தையாகச் சீற ஆரம்பித்து விட்டார்.**

**'சா**ர்' எங்க அண்ணன் சூர்யாதான் எனக்கு முதல் எதிரி. ஸ்கூல் டேஸ்ல அண்ணன் லேட்டாதான் கிளம்புவாரு. நான் சீக்கிரமா கிளம்பி ரெடியாயிடுவேன். ஆனா ரெண்டுபேரும் ஒரே கார்லதான் ஸ்கூலுக்குப் போகணும். இதனால எனக்கு ஸ்கூலுக்குப் போறதுக்கு லேட்டாயிடும். டீச்சர்ஸ்கிட்ட வஞ்சனையில்லாம திட்டும் கிடைக்கும். அண்ணன் செய்ற தப்புக்கெல்லாம் பலிகடா ஆகறதுன்றது எனக்கு அப்பவே ஸ்டார்ட் ஆயிடுச்சு.

ப்ளஸ் டூவில் நல்ல மார்க் வாங்கினதுக்காக அப்பா எனக்கு பைக் வாங்கிக் கொடுத்தாரு. வாங்கிக் கொடுத்து என்ன பிரயோஜனம்? காலைல எந்திரிச்சு காலேஜ் போற துக்கு முன்னாடி வண்டியை நல்லா துடைச்சு வைச்சுட்டு குளிக்கறதுக்காக பாத்ரூம் போவேன். அந்த கேப்பில் அண்ணன் பைக்கை எடுத்துக்கிட்டு பறந்துடுவாரு. இப்படி ஒருநாள் பைக்கை எடுத்துட்டுப் போனவரு, இரண்டு நாள் வரவே இல்லை. அண்ணனோட ஃப்ரெண்ட்ஸுக்கெல்லாம் போன் போட்டு விசாரித்தும் எங்க போனாருனு தெரியலை. இரண்டு நாள் கழிச்சு வந்து சேர்ந்த அண்ணன், பைக்கை வாசலில் நிப்பாட்டிட்டு ரொம்ப கூலா, கேஷுவலா வீட்டுக்குள் நடந்து போனாரு. எல்லோர் வீட்லையும் அண்ணன்கள் பண்ற ஏகபோக அதிகாரம் எனக்கு அப்போதுதான் புரிஞ்சது.



நாங்க ரெண்டு பேரும் சேர்ந்து ஒரு ரூம்ல இருந்தா கண்டிப்பா சண்டை வந்திடும். அதனால சின்ன வயசுல அதிகமா பேசிக்கவே மாட்டோம். சூர்யா

# "முதல் எதிரி சூர்யாதான்!"



மீன் மாட்டிக்கிட்டேயிருந்தது. எனக்குச் சாயங்காலம் வரை ஒரு மீன்கூட கிடைக்கலை. கடைசியா முயற்சி பண்ணி பார்ப்போமேன்னு தூண்டிலைப் போட்டேன். மிகப்பெரிய மீன் தூண்டிலில் மாட்டிடுச்சு. அண்ணனுக்குக் கிடைச்ச மீன்களை



அண்ணன் பண்ற தப்புக்கும் எனக்குத்தான் அம்மாகிட்ட அடிவிழும். எல்லா அம்மாக்கள் மாதிரி எங்கம்மாவுக்கும் அண்ணனைத்தான் ரொம்பப் பிடிக்கும். ''அம்மா உனக்கு எப்பவுமே என்மேல ஓரவஞ்சனைதான். அண்ணன்னா உங்களுக்கு எப்பவுமே உசத்திதான்'' என்று அம்மாவிடம் அடிக்கடி சொல்வேன். அப்பாவுக்கும் அண்ணன் பெருமை சேர்க்கக்கூடிய ஆள். அண்ணன் சினிமால வருவார்னு அப்பா எதிர்பார்க்கவில்லை. எதிர்பார்க்காம வந்து இவ்வளவு பெரிய ஸ்டார் ஆகிட்டதால, அப்பாவுக்கு அளவு கடந்த மகிழ்ச்சி.

நாங்க ஃபேமிலியோட ஒருமுறை கொச்சி டூர் போயிருந்தோம். அந்த ஊர் ஏரியில் நானும், அண்ணனும் தூண்டிலை வைச்சு மீன் பிடிச்சுக்கிட்டு இருந்தோம். அண் ணனுக்குச் சின்னச்சின்னதா நிறைய

ஒண்ணுசேர்த்தா கிடைக்கிற மீனைவிட அந்த மீன் ரொம்பப் பெருசா இருந்துச்சு! ''கார்த்தி உனக்கு லேட்டா கிடைச்சாலும் பெருசா கிடைக்கும்''னு எனக்கு நானே சொல்லிக்கிட்டேன்.

சில வருடங்களுக்கு முன்னால மேற்படிப்புக்காக அமெரிக்கா போய்ட்டேன். நான் அங்கிருந்த சமயங்களில் அண்ணன் ஃபோன் பண்ணி, ''டேய் எப்படா திரும்பி வருவ, இங்க எனக்குச் சண்டை போட ஆள் இல்லை. ரொம்ப போரடிக்குது''ன்னு சொல்லி கலாய்ப்பார். அப்ப 'நந்தா' யு.எஸ்.ஸில்





ரிலீஸ் ஆன நேரம். சினிமா பார்க்கணும்னு வெளியில போனா பனிமழை பொழியுது. அதைப் பொருட்படுத்தாம 'நந்தா'வைப் போய் பார்த்து, என் தமிழ் நண்பர்களிடம் ''இது என் அண்ணன்தான்'' என்று சொல்லி சந்தோஷப்பட்டேன். எத்தனை கோடி கொடுத்தாலும் அந்தச் சூழல் திரும்ப கிடைக்காது சார்'' என்று சொல்லும் போது, கார்த்தி பேச வார்த்தை ஒன்றும் கிடைக்காமல் தடுமாறுகிறார்.

''சூர்யா அண்ணன் தன்னுடைய வாழ்வில் சந்தித்த பெண்கள், காதல் போன்ற உணர்வுபூர்வமான விஷயங்களை என்கிட்ட ஷேர் பண்ணிக்கிட்டது கிடையாது. காதல் திருமணம் பண்ண முடிவெடுத்தப்பக்கூட அப்பா, அம்மாகிட்ட மட்டும்தான் சொன்னாரு. அண்ணன் எடுக்கும் முடிவு எங்க குடும்பத்துக்கு ஏத்த சரியான முடிவாகத்தான் இருக்கும். ஜோதிகா அண்ணி எங்க வீட்டுக்கு வந்த பிறகு இதைப் புரிஞ்சுக்கிட்டேன்.

வீட்டுக்குள்ள எனக்கும் என் அண்ணனுக்கும் கொஞ்சம் முரண்பாடு இருந்தாலும், சினிமா கேரியரை நான் செலக்ட் பண்ண உடனேயே, அண்ணன் பல விஷயங்களில் வழிகாட்டியா இருந்திருக்காரு. ஒரு ஹீரோவுக்குத் தேவையான உடற் பயிற்சி, காஸ்ட்யூம் மேக்கப் எனப் பல விஷயங்களில் அண்ணன் அட்வைஸ் பண்ணாரு. குறிப்பா உடற்பயிற்சியோட முக்கியத்துவத்தை அடிக்கடி சொல்லிக்கிட்டேயிருப்பாரு. அண்ணனுக்கு சினிமாவில் பல படங்கள் நடித்த பிறகு கிடைத்த அங்கீகாரம், எனக்கு ஓரிரு படங்களில் கிடைத்ததற்கு அண்ணனின் வழிகாட்டுதலும் முக்கிய காரணம். கடுமையான உழைப்புக்கு நல்ல பலன் கிடைக்கும் என்பதை நான் அண்ணனைப் பார்த்துதான் உணர்ந்தேன்.

இண்டஸ்ட்ரீயில் பெரிய ஹீரோவா இருந்தாலும், மூத்த பையனா குடும்பத்துக்குச் செய்ய வேண்டிய கடமையில் எதையும் அண்ணன் குறைவைச்சது கிடையாது. தங்கச்சிக்குக் கல்யாணத்தை, தானே செலவு செய்து முன்னின்று நடத்தி வைச்சாரு. ஒவ்வொரு விஷயத்தையும் பெஸ்ட்டா செஞ்சு முடிச்சாரு. சினிமா, குடும்பம் இரண்டையும் சரிவிகிதத்தில் கொண்டு போற அந்தத் திறமைதான் அண்ணன்கிட்ட எனக்குப் பிடித்த விஷயம். என்னை சிவக்குமார் சார் பையனான்னு கேட்கறவங்களைவிட, சூர்யா தம்பியான்னு கேட்கறவங்கதான் அதிகம்.''

அண்ணனின் சாதனையை உங்களால் தாண்டமுடியுமா?

''நான் எட்டு அடி பாஞ்சா அண்ணன் அறுபத்தி நாலு அடி பாஞ்சு முன்னாடி நிக்கறாரு. அண்ணன் சிங்கம் சார். அண்ணனை ஃபாலோ பண்ணி நிறைய கத்துக் கத்தான் முடியும்.''

**- ராகவ்குமார்**

அருள்வாக்கு

# மௌனம்



மனஸை அடக்கினவன்தான் முனி. 'முனிவனின் குணம் எதுவோ அதுதான் மௌனம்' என்பதே அந்த வார்த்தைக்கு அர்த்தம். முனிவனின் குணத்தில் பேசாமலிருப்பதுதான் தலை சிறந்தது என்று பொதுக் கருத்து இருந்திருப்பதால்தான் 'மௌனம்' என்றால் 'பேசாமலிருக்கிறது' என்று ஆகிவிட்டிருக்கிறது. மனஸை அடக்கினவனின் தன்மை என்றாலும், அதுவே நம் மாதிரி மனஸ் அடங்காதவர்கள் அந்த நிலையை அடைவதற்கு உதவுவதாகவுமிருக்கிறது.

பிரம்மஞானியான முனிவன் மௌனம், மௌனமாயில்லாமலிருப்பது என்ற இரண்டையும் விட்டு விடுகிறான் என்று உபநிஷத் சொல்கிறது. முதலில் படித்துப் பண்டிதனாகி, ரொம்பவும் வாதங்கள் சர்ச்சைகள் பண்ணி ஸத்ய தத்வத்தைத் தெரிந்து கொள்கிறான். அப்புறம் பாண்டித்யம், பேச்சு எல்லாவற்றையும் விட்டு விட்டு ஒரே நிஷ்டையில் போய் விடுகிறான். அப்புறம் பிரம்ம ஞானியாகிறபோது மௌனத்தையும் விட்டு விடுகிறான், மௌனமில்லாமையையும் விட்டுவிடுகிறான் என்று உபநிஷத் சொல்கிறது. இப்படிச் சொன்னால் அது எப்படி ஸாத்யம்? ஒன்று பேச்சை விட்டு மௌனமாக வேண்டும்; அல்லது மௌனத்தை விட்டுப் பேச வேண்டும். இரண்டையுமே விடுவது என்றால் எப்படி முடியும்? அந்த ஞானியின் நிலைக்குப் போனால்தான் இது புரியும். அவனுக்குப் பேச வேண்டும் என்றோ, பேச வேண்டாமென்றோ எந்த சொந்த அபிப்ராயமும் ஆசையும் இருக்காது. லோகாநுக்ரஹத்துக்காக அவன் மூலம் உபதேசமாகப் பேச்சு வந்தாலும் அவன் தான் பேசுவதாக நினைக்க மாட்டான். அதைவிடப் பெரிய மௌன உபதேசத்தில் தக்ஷிணாமூர்த்தி மாதிரி அவனைப் பராசக்தி உட்கார்த்தி வைத்திருந்தாலும் 'நாம் மௌன விரதம் என்று ஒன்று அனுஷ்டிக்கிறோம்' என்று அவன் நினைக்க மாட்டான். இதைத்தான் மௌனம், அமௌனம் இரண்டையும் விட்ட நிலை என்பது.

**– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**



# வே.எழிலரசு



ஏழ் உலகும் சூழ் இருளாய் என் பொருட்டால் வேகின்ற
ஆழ் துயரம் ஏது என்று அறிகிலேன்! பாழி
வரையோ எனும் நெடுந்தோள் மன்னாவோ! தின்னும்
இரையோ, இரவுக்கு யான்?

– புகழேந்தி

உறக்கம் என்ற உணர்வு மட்டும் மனிதர்களுக்கு அருளப் படாமலிருந்தால் மனித வாழ்வின் கதிதான் என்ன? அகிலாவின் இமைகள் நித்திரை என்ற மயிலிறகின் வருடலில் கனத்தன. அப்படியே தூங்கியும் போனாள். இவ்வளவு நேரம் சிந்தனைகள்



# காதல் கேம்பஸ்

உயிரின் வேரையே தின்றுகொண்டிருந்தன.

'ஏன், ஒவ்வொரு முறையும் ஏதாவது ஒரு தடை வருகிறது? நான் உதயகுமாரிடம் காதலைச் சொல்ல முயலும்போதெல்லாம் அதைச் சொல்லவிடாமல் ஏதாவது நிகழ்ந்து விடுகிறதே ஏன்? ஒரு வாக்கியம். மூன்று சின்னச் சின்னச் சொற்களால் ஆன ஒரே ஒரு அழகான வாக்கியம். அதைச் சொல்ல முடியாமல் தடுமாறுகிறேன்... ஏன்?

என் உதடுகள் தினம் தினம் எத்தனை சொற்களை உச்சரிக்கின்றன. அதுவும் உதய குமாரிடம் எத்தனை முறை உரையாடியி ருக்கிறேன். ஆனாலும் அவன் முகத்தைப் பார்த்து 'ஐ லவ் யூ டா' என்று சொல்ல விடாமல் என்னைத் தடுப்பது எது?

அடேய் தேவ தூதனே... நீ தானடா எனது ராட்சஸனும் கூட. நான் கண்ணாடி முன்னால் நின்று என்னை அலங்கரித்துக் கொள்ளும் பொழுதுகளெல்லாம் நீ பக்கத் தில் நின்று ரசிக்கிறாயே. உனக்குத் தெரி யுமா அது? நான் சாப்பிடும்போது, ஒவ் வொரு கவளமாய்ப் பிசைந்து ஊட்டி விடு கிறாயே. அறிவாயா நீ? என் காட்சி உணர் வுக்கு ஜீவன் அளிக்கும் எதை என் கண்கள் கண்டாலும் நீயும் அந்தக் காட்சி அனுப வத்தை அடைய வேண்டுமென்றே அவா வுகிறேன். ஏன்?

இசையின் மாயக் கம்பளம் அமர்ந்து அந்தர வெளிகளில் மிதக்கும் தருணங் களில் நீ அருகே இல்லையே என்ற ஆதங் கத்தில், சட்டென்று பூமிக்கு வந்து விடு கிறேன். ஏன்? எந்த ஒரு நல்ல கவிதை யைப் படித்தாலும் உடனே உன்னிடம் அதைச் சொல்லி விடவேண்டும் என்று படபடப்போடு ஓடி வருகிறேன். ஏன்?

ஆனால் அந்த மூன்று சொற்களால் ஆன மந்திர வாக்கியம் மட் டும், ஏன் என் உதடுகளிலிருந்து உதிர மறுக்கிறது? வெட் கமா? நிஷாதான் சொல்வாள். 'வெட்கமா இருக்குடி' என்று சொல்லும்போது அட்ட காசமாகச் சிரித்துவிட்டுச் சொன்னாள்.

''இந்த இருபத்தொன்றாம் நூற்றாண் டில் வெட்கமா? மவுண்ட் ரோடு சிக்னல்-ல மாட்டு வண்டியைப் பாத்து இருக்கியாடி?''

''ஓ! காணும் பொங்கல் அன்னிக்கு பாத்து இருக்கேன்.''

''அப்ப சரி. வருஷத்துக்கு ஒருநாள் நீயும் வெக்கப்பட்டுக்க. மத்த முன் ணூத்து அறுபத்து நான்கு நாள்ல என்னிக்காவது உன் காதலைச் சொல்லி இருக் கலாமில்லை?''

7

''சரி... சரி... இந்தக் கவி யரங்கத்துலயாவது சொல்லிடு. என்.டி.டி.வி. ஜனனி கேக்கும்போது, மைக்கைப் புடிச்சு இந்த உலகத்துக்கே சொல்லப்போறன்னு சொன்ன. சரி பரவாயில்லை. ஷர்மிலியோட

காதல் * கலாட்டா * கவிதை தொடர்கதை

டிராஜடி ப்ளாஷ் பேக் உன்னை சொல்லவிடாம தடுத்துடுச்சு. பரவாயில்லை... போகட்டும். அங்க சொல்லியிருந்தாகூட அது செய்தியாத்தான் ஆகியிருக்கும். ஒரு காதல், செய்தியா வெளிப்படறதைவிட கவிதையா வெளிப்பட்டா நல்லாத்தான் இருக்கும். அதனால இந்த சான்ஸை மிஸ் பண்ணிடாதே'' என்றாள்.

நானும் என் கவிதையைக் காதலாக எழுதியிருந்தேன். என் பெயரை முதலாவதாக அறிவிக்க வேண்டும் என்ற கோரிக்கையை வைத்திருந்தேன். கவியரங்கத் தலைவராக வந்திருந்த தமிழ்த்துறைத் தலைமைப் பேராசிரியரும் அப்படியேதான் 'அன்னொன்ஸ்' பண்ணாரு. ஆனா இந்த ஆனந்த் எழுந்து நின்னு,

''காட்டை வித்துட்டேனான்னு பையன் விசாரிச்சு கடிதம் எழுதியிருக்கான்...''
''ஓஹோ... அதான் 'நிலம்... நிலமறிய ஆவல்'னு தொடங்கியிருக்கானா?''
- ஜே.தனலட்சுமி, கோவை

''சார் அகிலா நம்ம கல்லூரியோட நட்சத்திரக் கவிஞர். அவுங்க கடைசியா வாசிச்சாதான் அரங்கத்துல எதிர்பார்ப்பு இருக்கும். முதல்லய வாசிச்சுட்டா கூட்டம் கலைஞ்சுடும்.''

உடனே அந்த ப்ரொபஸரும் தன்னோட தர்பூஸ் தலையைத் தடவிட்டே ஆமாம் ஆமாம்னு மண்டைய ஆட்டிக்கிட்டு, சபிதாவைக் கவிதை படிக்க அழைச்சிட்டாரு. அந்த நேரத்தில் எனக்கு ஏற்பட்ட உணர்வு என்ன? ஏமாற்றமா? இல்லை, நட்சத்திரக் கவிஞர் என்று சூட்டப்பட்ட மகுடம் தந்த பெருமிதமா? 'பேக்கு' போல உக்காந்துட்டேன். கடைசி வரை எனக்குக் கவிதை படிக்க வாய்ப்பே கிடைக்காது என்பதை அறியாமலேயே, கவியரங்கம் ஒரு கலாட்டாவில் முடியப்போகிறது என்பதை உணர்ந்து கொள்ளாமலேயே!

இப்பொழுது யோசித்துப் பார்த்தால் எனக்கு ஆனந்தின் மீது கூட சந்தேகம் ஏற்படுகிறது. உதய்குமாரின் நிழலாக இருப்பவன். விசுவாசத் தொண்டன். ஏதாவது சதி செய்கிறானா? சே! சே! இருக்காது! கவியரங்கத்தில் கலாட்டா நிகழ்ந்தால் அது உதயகுமாருக்குத்தானே இழுக்கு. உதயகுமாருக்கு அவமதிப்பு ஏற்படும் எதையும் ஆனந்த் செய்யமாட்டானே?

ஆனால் எந்த ஓர் எதிர் நிகழ்வுக்கும் ஓர் ஆரம்பச் சுழி இருக்குமே. இன்று நடந்த கலாட்டாவுக்கு ஆரம்பச் சுழி எது? அகிலா யோசித்தாள். தலை கனத்தது. ஆம் கோபால். அவன்தான் காரணம். எப்ப பாத்தாலும் எல்லோரையும் வம்புக்கு இழுப்பான் இல்ல? இன்னிக்கு அவன் பேரை அன்னொன்ஸ் பண்ணதுமே ஹால் முழுக்க, பரபரப்பாயிடிச்சே!

கோபால் வந்து மேடையில் நின்றதும், ரவி மேனவனும் அவன் பிரெண்ட்ஸும் கோபாலா கோபாலா என்று கோரசாகக் குரல் கொடுத்தார்கள். கோபால் ஹாலில் அமர்ந்துதான் அவசர அவசரமாகக் கவிதை எழுதினான். பெயர் அறிவிக்கப்பட்டதும், மேடையில் ஏறி நின்று 'போடியம்' (PODIUM) மேல் தாளை வைத்து, சில வரிகள் எழுதினான். கோபாலா... கோபாலா சத்தம் ஓயும் வரை காத்திருந்தான். தன்னம்பிக்கையும் சிநேக பாவத்தையும் பாவவிடும் புன்னகையை வெளிப்படுத்திக் கூச்சலை அடக்கினான்.

அரங்கம் நிசப்தமானது. தமது கவிதை முழுவதுமாக எழுதி முடிக்கப்படவில்லை என்பதை அவைக்கு உணர்த்தும் விதமாக, தமது கவிதை எழுதப்பட்ட தாளை உயரத்தூக்கிக் காட்டி, ''இது ஒரு குறைப்பிரசவம்'' என்று சொல்லி டைமிங் கொடுத்தான்.

அந்த டைமிங்கில் எழுந்து நின்ற ராம்ஜி, ''உன்னைப்போல'' என்று உரக்கக் குரலெழுப்பினான்.



**ரா**ம்ஜி கோஷ்டிக்கும், கோபால் கோஷ்டிக்கும் ஏற்கெனவே இருந்த பகை காவல் நிலையம் வரை சென்றுள்ளதை கல்லூரியே அறியும். எனவே சட்டென்று நிசப்தம் சூழ்ந்தது. ஆனால் கோபால் கொஞ்சமும் அசராமல், நிதானமாக, ராம்ஜியை உற்றுப் பார்த்துக் கொண்டே, ''ஆம் என்னைப் போல'' என்றான். அவையின் எதிர்பார்ப்பு கூடியது.

கோபால் தன் கவிதையைத் தட்டிக் காண்பித்து ''இது குறைப்பிரசவம்தான். ஆனால் இது கறைப் பிரசவம் அல்ல. உன்னைப்போல'' என்று ராம்ஜியை நோக்கி விரல் சுட்டினான். உடனே அனைவரும் கரவொலி எழுப்பிவிட, ஆத்திரமடைந்த ராம்ஜி, தன் கையிலிருந்த மொபைல் ஃபோனை கோபாலை இலக்காக்கி வீசினான். கோபால் கண்ணில் காயமேற்படுத்தி வீழ்ந்தது ராம்ஜியின் கைப்பேசி.

ராம்ஜியின் பெஞ்சிலிருந்து மூன்றாவது வரிசையில் அமர்ந்திருந்த கதிர், விசையுறு பந்தென எம்பி, பெஞ்சுகளின் மீது தாவி ஓடி வந்து ராம்ஜியை எட்டி உதைத்தான். ராம்ஜியின் நண்பர்களுக்கும் கோபாலின் நண்பர்களுக்கும் நடந்த அடிதடியை உதயகுமாராலும் அடக்க முடியவில்லை. அரங்கத்தில் நிறையச் சேதம். உடைந்து போன நாற்காலிகள், கிழிந்துபோன சட்டைகள், அறுந்துபோன செருப்புகள், நசுங்கிப் போன மொபைல் ஃபோன்கள், வாசிக்கப்படாத அகிலாவின் கவிதை.

அகிலா அழுதாள். தலையணை நனையும் வரை அழுதாள். குலுங்கும் அவள் உடல் கண்டு, கொஞ்ச நேரம் அழுது ஓய்ந்து விடுவாள் என்று எண்ணி வசுமதியும் தூங்கிவிட்டாள்.

**இ**ப்படி ஒரு கலாட்டா நிகழ்ந்ததற்குக் காரணம் கோபாலுக்கும் ராம்ஜிக்கும் இருந்த பகையா அல்லது என் காதல் சொல்லப்படாமல் போக வேண்டும் என்ற விதியா?

ஆசைகள் நிராசைகள் ஆகும்போது, அல்லது புத்திசாலித்தனமான திட்டம் என்ற உறுதியான நம்பிக்கையுடன் இருந்தவை நிறைவேறாமல் போகும் போது, மனித மனம் ஏதேதோ கற்பனைகளை வளர்த்துக் கொள்கிறது. அறிவு தத்துவ விசாரணையில் இறங்கிவிடுகிறது. மனம் புனைவுகளை நோக்கிப் புறப்பட்டு விடுகிறது. அப்படித்தான் அகிலாவும்.

''இன்று என் காதல் சொல்லப் படக்கூடாது என்று முன்னமே எழுதப் பட்டுவிட்டது போலும். அதனால்தான் எது நடக்க வேண்டுமோ அது நன்றாகவே நடந்திருக்

''அந்த ஐ.ஏ.எஸ். அதிகாரி ஏன் 'வீடு போ போங்குது. காடு வா வாங்குது'னு சோகமா சொல்றாரு?''

''வீட்டு வசதித் துறையிலிருந்து அவரை வனத்துறைக்கு மாத்திட்டாங்களாம்!''

- அ.கு.கிருஷ்ணன், புதுவை

கிறது'' என்று எண்ணினாள்.

ஆனால் அங்கேயே அவளின் எண்ணப் பறவை ஓய்வெடுத்துக் கொண்டிருந்தால் அவளின் துன்பம் தணிந்திருக்கும். பறவை மேலும் சிறகை விரித்தது. ஒருவேளை நான் உதயகுமாரைக் காதலிப்பதில் படைப்பின் பெருங்கருணைக்கு விருப்பமில்லையோ? அதனால்தான் இப்படி எதிர்பாராத தடைகள் வருகின்றனவோ? இந்தத் தடைகள் எதன் குறியீடு? என்ன சமிக்ஞை? இதைத்தான் விதி என்பதோ?

அகிலாவால் அதற்கு மேல் யோசிக்க முடியவில்லை. அறிவு சிந்தனையின் ஆழத்தை நோக்கிப் பயணிப்பதைவிட, கற்பனையின் உயரத்துக்குப் பறப்பதே உடலுக்கும் இந்த இரவுக்கும் உகந்தது என்று முடிவெடுத்தாள். தான் தன் காதலை உதயகுமாரிடம் சொல்வது போலவும், அவன் அதை ஏற்றுக்கொண்டது போலவும் மாற்றி யோசித்தாள்.

திருமணத்துக்கு என்ன புடைவை என்று யோசித்தாள். வரவேற்புக்கு யாரையெல்லாம் அழைக்க வேண்டும் என்று யோசித்தாள். தேனிலவு திட்டமிடலில் உதய குமாருக்கும் அகிலாவுக்கும் ஒரு பெரிய தர்க்கம் நடந்தது. உதயகுமார் தீர்மானமாகச் சொல்லிவிட்டான். ''மேற்கத்திய நாடுகளும் வேண்டாம். கிழக்காசிய நாடுகளும் வேண்டாம். நம்ம நாட்டிலயே ஒரு இடம் சொல்லு அகிலா.''

''உதய் 'கோசானி'ன்னு ஓர் இடம் இருக்கு.''

**உதயகுமாரின் தோளின் மீது அகிலா சாய்ந்தபோது, அவளின் மூடிய இமைகளுக்குள் மிதந்த ஆரஞ்சு வண்ண மிதவையைத் தூக்கம் தன் தூண்டிலை வீசிப் பறித்தது.**

''எங்கே?''

''உத்தர்கண்ட்-ல, நைனிடால் போய் அங்கிருந்து எட்டு மணி நேர டிரைவ்தான். அருமையான அமைதியான இடம். கூட்டம் ரொம்ப இருக்காது. போற வழியில அல்மோராவில் சூப்பரான ஒரு ரெஸ்டாரண்ட் இருக்கு. அங்க சாப்பிட்டுக்கலாம்...''

''கோசானியில என்ன ஸ்பெஷல்?''

''அதை ஸ்விட்சர்லாண்ட் ஆஃப் இண்டியா-ன்னு சொல்லுவாங்க. அங்க ரெண்டு பக்கமும் உயர உயரமாய் பைன் மரங்கள் வளர்ந்து இருக்குற சாலையில் நாம ரெண்டு பேரு மட்டும் நடந்து பேசிக்கிட்டுப் போனா எப்படி இருக்கும்?''

தூரத்தில் வெள்ளிப் பனி மூடிய சிகரங்களின் மீது அஸ்தமிக்கும் சூரியன் ஆரஞ்சு நிறத்தை ஊற்றுவதைப் பார்த்துக் கொண்டே உதயகுமாரின் தோளின் மீது அகிலா சாய்ந்தபோது, அவளின் மூடிய இமைகளுக்குள் மிதந்த ஆரஞ்சு வண்ண மிதவையைத் தூக்கம் தன் தூண்டிலை வீசிப் பறித்தது. உறக்கம் என்ற ஓர் உணர்வு மட்டும் மனிதர்களுக்கு அருளப்படாமலிருந்தால், மனித வாழ்வின் கதிதான் என்ன?

ஆனால் அந்த நள்ளிரவிலும் இன்னும் இரண்டு இதயங்கள் தூங்காமல் தவித்துக் கொண்டிருந்தன.

உதயகுமார் - ஆனந்தைக் கடுமையாகத் திட்டிவிட்டதை நினைத்து வருந்திக் கொண்டிருந்தான்.

ஆனந்த், தனது வழிகாட்டி என்றும் தலைவன் என்றும் மனத்துக்குள் வரிந்து கொண்ட உதயகுமார் ஏமாறும்படி தவறு செய்துவிட்டதை எண்ணி மனம் புலம்ப, தவித்துக் கொண்டிருந்தான்.

**- தொடரும்**

# ஒப்பற்ற தொண்டு

அமரர் கல்கி

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழாராய்ச்சித் துறைப் பேராசிரியராகப் பணி செய்து வரும் ஸ்ரீ டி.வி.சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் தமிழ் நாட்டுக்கு ஒப்பற்ற தொண்டு புரிந்திருக்கிறார் என்று கூறுதல் மிகையாகாது.

'பிற்காலச் சோழர் சரித்திரம்' என்ற பெயருடன் ஸ்ரீ சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் எழுதியுள்ள அரும்பெரும் நூல் இரண்டு பகுதிகளாக வெளி வந்திருக்கிறது.

கி.பி.846ஆம் ஆண்டில் பழையாறையில் குறுநில மன்னனாயிருந்த விஜயாலய சோழன் அப்போது தஞ்சை நகரிலிருந்து ஆட்சிபுரிந்த மற்றொரு குறுநில மன்னனான முத்தரையனை வென்று தஞ்சையைக் கைப்பற்றினான். அது முதல் இரண்டாவது சோழ சாம்ராஜ்யம் விரிந்து பரவத் தொடங்கியது. விஜயாலய சோழன் குலத்தில் தோன்றிய ஆதித்தன், பராந்தகன், கந்தர சோழன், இராஜராஜன், இராஜேந்திரன், குலோத்துங்கன் முதலிய பேரரசர்களின் காலத்தில் நிகழ்ந்த சரித்திரச் சம்பவங்கள் இந்த நூலில் ஆராய்ச்சியுடன் முறைப்படுத்திக் கூறப்பட்டிருக்கின்றன.




இரண்டாவது சோழ சாம்ராஜ்யம், கி.பி.1246 முதல் 1279 வரை அரசு புரிந்த மூன்றாம் இராஜேந்திர சோழனின் ஆட்சியோடு முற்றுப் பெறுகிறது.

விஜயாலய சோழன் காலத்திலிருந்து மூன்றாம் இராஜேந்திர சோழன் காலம் வரைக்கும் சோழ சாம்ராஜ்யத்தைச் சீரும் சிறப்புமாக அரசு புரிந்து சரித்திரப் புகழ்பெற்ற சோழ மன்னர்களைப் 'பிற்காலச் சோழர்' என்று குறிப்பிடுவது மரபு.

அந்தப் பேரரசர்களின் வரலாறுகளையே ஸ்ரீ சதாசிவ பண்டாரத்தார் இந்த அரும் பெரும் நூலில் விரிவாக எழுதியிருக்கிறார்.

ஆங்கிலத்தில் பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் எழுதிய ஆராய்ச்சி நூலை ஓரளவு ஆதாரமாகக் கொண்டும், வரலாறு சம்பந்தமான பல கல்வெட்டுக்களை நேர்முகமாக ஆராய்ந்தும், ஸ்ரீ பண்டாரத்தார் பல ஆண்டு காலம் செய்த முயற்சிகளின் பலனாகவே இந்நூல் உருவாகியிருக்கிறது.

ஸ்ரீ சதாசிவ பண்டாரத்தாரின் தமிழ்ப் புலமையும் இந்நூலை ஆக்கத் துணை புரிந்திருக்கிறது. ஒட்டக்கூத்தரின் உலாக்கள், செயங்கொண்டாரின் கலிங்கத்துப் பரணி முதலிய நூல்களை நன்கு ஆராய்ந்து, அவற்றிலுள்ள சரித்திர ஆதாரங்களையும் ஸ்ரீ பண்டாரத்தார் இந்நூலை ஆக்குவதற்குப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்.

தமக்கு முன் சோழர் சரித்திரம் எழுதியுள்ளவர்களின் முடிவுகளுடன் ஸ்ரீ சதாசிவ பண்டாரத்தார் சிற்சில இடங்களில் மாறுபட்டிருக்கிறார்; அவற்றுக்குரிய காரணங்களைக் கூறியிருக்கிறார்.

**- படித்தேன்; ரசித்தேன் கட்டுரைத் தொகுப்பிலிருந்து...**

''டைரக்டர் ஏன் திடீர்னு கோபப்படுகிறார்?''

''தயாரிப்பாளர் அவரிடம் 'கதை'யைக் கேட்டுட்டாராம்!''

- எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி



''என் மனைவி சிரிச்சு நான் பார்க்கணும் சார்...''

''நோ... அதுக்காகவெல்லாம் உங்களுக்கு இன்கிரிமெண்ட் போட முடியாது...''

- ஜே. தனலட்சுமி, கோவை

''போருக்கு அழைத்த எதிரி மன்னனை, ஏன் மன்னா நம் நாட்டைச் சுற்றிப்பார்க்க அழைத்தீர்கள்?''

''நம் நாட்டைப் பார்த்த பிறகாவது அவனுக்குப் போர் தொடுக்கும் எண்ணம் மாறாதான்னு ஒரு நப்பாசை தான்!!''

- வெ.சீதாராமன், சென்னை



''இந்த ஸீன்லே டைபாய்டு ஜுரத்திலே படுத்திருக்கிற கதாநாயகன் திடீர்னு மாடிப்படியில இறங்கி நடந்து வர்றாரே... ஏன்?''

''ஜுரம் படிப்படியா குறைஞ்சுக்கிட்டே வருதுங்கறதை டைரக்டர் சிம்பாலிக்கா காட்டறார்!''

- ஆர். பஞ்சவர்ணம், போளூர்

# இது டைஃபாய்டு குறையும் ஸீன்!




''இந்த கேஸ் ஆபரேஷன்லதான் 'முடியும்' போல இருக்கு...!''

''நம்ம டாக்டர் பண்ணா, ஆபரேஷன்ல இந்த கேஸை கண்டிப்பா 'முடிச்சி'டுவார்!!''

- வெ.சீதாராமன், சென்னை

## கல்கி கிளினிக்



# தீபாவளி

என். விமலாராணி, ஈரோடு

இது தீபாவளி பண்டிகைக்கான காலம். எல்லோரையும் போல, அதிகாலைக் குளியல், பலகாரங்கள் எல்லாம் சாப்பிட எனக்கும் ஆசை. ஆனால், தீபாவளி அன்று அப்படி எல்லாம் செய்தால் முப்பத்துரெண்டு வயதான எனக்கு உடனே உடம்பில் ஒவ்வாமை வந்து விடுகிறது. நான் சந்தோஷமாக ஆரோக்கியமாக எப்படி தீபாவளியைக் கொண்டாடுவது?

**சித்த மருத்துவர் பத்மப்ரியா:**

கவலைப்படாதீங்க விமலாராணி, நிச்சயம் இந்த வருஷம் நீங்களும் மற்றவங்க மாதிரி தீபாவளியைச் சந்தோஷமாகக் கொண்டாடி ஜமாய்க்கத்தான் போறீங்க. அதிகாலைக் குளியலுக்கு, தலைக்கு நல்லெண்ணெய் தேய்த்துக் குளிப்போம். அதில் ஓமம், மஞ்சள் பொடி மற்றும் வெற்றிலை சேர்த்து, சூடு படுத்தி, தலைக்குத் தேய்த்துக் குளித்தால், அதிகாலையில் எழுந்து தலைக்குக் குளிப்பதால் வரக்கூடிய பாதிப்புகள் வராது. தீபாவளி அன்று நிச்சயம் நெய், எண்ணெய் பதார்த்தங்களைக் காலை வேளையிலேயே எல்லோருமே சாப்பிடு வோம். அப்படி அசாதாரண வேளையில் சாப்பிடுவதால், அஜீரணம், புளிச்ச ஏப்பம் போன்றவை வரக்கூடும். இதையெல்லாம் தவிர்ப்பதற்காகத்தான் அந்தக் காலத்தில், தீபாவளி லேகியம் என்ற ஒன்றைத் தயார் செய்து தீபாவளி அன்று சாப்பிடுவார்கள். இதோ அந்த லேகியம் தயாரிக்கும் முறை: மிளகுப் பொடி, சுக்குப் பொடி, திப்பிலிப் பொடி, தனியா தலா 2 டீஸ்பூன்கள், சீரகம் 1 டீஸ்பூன், ஏலக்காய் 4 அல்லது 5, சித்தரத்தை 5 கிராம், ஜாதிக்காய் சிறிய துண்டு,

உங்கள் சந்தேகங்களை 'கல்கி கிளினிக்' என்று குறிப்பிட்டு அனுப்புங்க... kalki@kalkiweekly.co
ஒரு ஸ்பேஸ் வி

ஓமம் 5 கிராம்... இவை எல்லாவற்றையும் லேசாக வறுத்துப் பொடி செய்து கொள்ளவும். இந்தப் பொடியைத் தண்ணீரில் கலந்து கொதிக்க வைத்துப் பின் வெல்லம் சேர்த்து, சற்று நேரத்தில் நெய்யும் சேர்த்து நன்றாகக் கிளறி, கீழே இறக்கி வைத்தபின் தேன் கலந்து சாப்பிட்டால், தீபாவளி ஸ்வீட்ஸ் சாப்பிடுவதாலோ அல்லது எண்ணெய் பதார்த்தங்கள் அதிகம் சாப்பிடுவதாலோ ஏற்படும் கோளாறுகள் வராது. லேகியம்தான் இருக்கிறதே என, ஒரேயடியாகப் பட்சணங்கள் சாப்பிட வேண்டாம்.

**விச்வநாதன், வேளச்சேரி**

**தீபாவளி அன்று மட்டும் நாம்** ஏகப்பட்ட தின்பண்டங்களைச் சாப்பிட்டுச் சுத்தமாக உடல் உழைப்பே செய்யாமல் இருந்தால், நாம் சாப்பிட்ட தின்பண்டங்களில் உள்ள கொழுப்பு நம் உடம்புக்குத் தானே போய்ச் சேர்ந்து கொண்டே இருக்கும்? சவூதி அரேபியாவில் பார்த்தீங்கன்னா, நல்லா மாமிசம் எல்லாம் சாப்பிட்டுவிட்டு கூடவே ஒரு இலையைச் சாப்பிடுவார்கள், அந்த இலை உடம்பில் கொழுப்புச் சத்தை நீக்கிவிட்டு, புரதச்சத்து மட்டும் உடம்பில் ஒட்டிக் கொள்ளச் செய்துவிடும். நாம் என்ன செய்யலாம், தீபாவளி அன்று ஏகப்பட்ட நெய், எண்ணெய் பதார்த்தங்களை ஒரேயடியாகச் சாப்பிடாமல் இருக்கலாம், அதேபோல



# லேகியம் சாப்பிடுங்க!

**சாப்பிடும் இனிப்பு மற்றும் கார வகைகளால், நம் உடம்பில் ஏகப்பட்ட கொழுப்புச் சத்து ஏறி விடும் என நண்பர் கூறுகிறார் இது சரியா?**

**டயடீஷியன் க்ருஷ்ணமூர்த்தி :**

உங்க நண்பர் சரியாகத்தான் சொல்லி இருக்கிறார். முன் காலத்தில் எல்லாம் வருடம் முழுதும் ஓடி ஓடி உழைத்துவிட்டு, தீபாவளி அன்று மட்டும் பல வகையான தின்பண்டங்களை உண்டுகளித்து, ஓய்வெடுப்பார்கள். ஆனால், இன்று அப்படியா தீபாவளி மட்டும் அல்ல, எல்லா நாளுமே நமக்கு உடல் உழைப்பு ரொம்ப ரொம்பக் குறைந்து விட்டது. அதில் தீபாவளி அன்று நாம்

* க்ருஷ்ணமூர்த்தி



* பத்மப்ரியா



கோயில்களுக்கும், உற்றார், உறவினர்கள் வீடுகளுக்கும் டூவீலரிலோ அல்லது கார்களிலோ செல்லாமல், காலாற சிறிது தூரம் நடந்து செல்லலாம். வெந்தயம் மற்றும் லவங்கப் பட்டையைப் பொடியாக்கி அதைத் தண்ணீரில் கலந்து எண்ணெய், நெய் பதார்த்தங்கள் சாப்பிடுவதற்கு ஒரு 15 நிமிடத் துக்கு முன்பு சாப்பிட்டு விடுவதாலும், நம் உடலில் கொலஸ்ட்ரால் சேராமல் ஓரளவு பார்த்துக் கொள்ளலாம்.

தொகுப்பு:

**நளினி சம்பத்குமார்**

அனுப்பலாம். உங்கள் செல்போனில், kadi என்று டைப் செய்து
ள் கேள்வி, பெயர், ஊர் ஆகியவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கும் எஸ்.எம்.எஸ். செய்யலாம்.

எந்திரன் ஃபீவர் தீபாவளி தாண்டியும் நீடிக்கும் என்பதால் சின்னப் பட
விஜய் அஜித் விக்ரம் படங்கள் எதுவும் தீபாவளிக்கு வெளிவராததால்
எனினும் எது வந்தாலும் பரவாயில்லைன்



ரத்த சரித்திரம். தயாநிதி அழகிரி இந்த படத்தை வெளியிடுகிறார். ''சூர்யா, ஒருவகையி அபின், கஞ்சா, மாதிரி அவரை வெச்சு ஒரு படம் பல ணிட்டா மறுபடியும் மறுபடியும் அவரை வெச்சு ஒ படம் பண்ணனும்னு மனசு ஏங்க ஆரம்பிச்சுடும்' இந்தப் படத்தின் இசை வெளியீட்டு விழாவில் இ படிப் புகழ்ந்திருப்பவர் சூர்யாவை வைத்து கஜி படம் எடுத்த ஏ.ஆர். முருகதாஸ். ராம்கோபா வர்மாவின் சினிமா கம்பெனியிலிருந்து இப்பட வெளிவருவது இன்னும் கூடுதல் மதிப்பு. அப்பே கேமராவுல ரத்தத்தைத் தெளிச்சு எடுத்திருப்பார்.



இயக்குநர் கரு.பழநியப்பன் இயக்கி நடிக்கும் மந்திரப்புன்னகையும் மனசை மயக்கும் என்று எதிர்பார்த்து இருக்கிறது. மயக்குமா?



உத்தமபுத்திரன். தெலுங்கில் வெற்றி பெற்ற ரெடி படத்தின் ரீமேக். தனுஷ் மித்ரன் ஜவகரின் வெற்றிக்கூட்டணி இதிலும் தொடர்வதால் நிச்சய வெற்றி என்ற நம்பிக்கையுடன் திரைக்கு வருகிறது. எப்போ தும் போல குத்துப்பாட்டு மெலடி ஃபைட்டுன்னு தனுஷ் பட ஃபார்முலா என்றாலும் காலேஜ் போகும் பையனின் கதை என்பதால் யூத் கலர் குறையாமல் இருக்கும்னு எதிர் பார்ப்பு ஏறி இருக்கு.

சுள்ளான் படம் சூப்பரா இருக்குமா?

தீபாவளி

## தீபாவளிக்கு ரிலீஸ் ஆவதைத் தவிர்க்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. ரசிகர்களுக்கு இது பட்டாசு இல்லாத தீபாவளியாகத்தான் இருக்கும். தில் இறங்க இருக்கின்றன ஐந்து படங்கள்



கமல், பாலாவால் பெரிதும் பாராட்டப்பட்ட மைனா படம் ன் தீபாவளிக்கு வரும் படங்களிலேயே கதை சத்துள்ள படம் ன்கிறது கோடம்பாக்க வட்டாரம். ரெட் ஜெயண்ட் மூவிஸ் மனாவை ஏஜிஎஸ் உடன் இணைந்து வெளியிடுகிறது. மனா படம் பார்த்துட்டு நான் நாலு நாளா தூங்கலை என்று தயநிதி ஸ்டாலின் சொல்லி இருந்தது படத்துக்குப் பயங்கர ளம்பரமாயிடுச்சு. காதலைக் கொண்டாடும் படங்களுக்கு த்தியில் இது காதலியைக் கொண்டாடும் படம் என்கிறார் ரபுசாலமன். கவிஞர் யுகபாரதி, தான் பிறந்த தஞ்சையைச் ற்றியுள்ள கிராமத்தின் பெயர்களை இணைத்தே ஒரு பாடல் ழுதியிருக்கிறார். அந்தப் பாடல் மியூஸிக் சேனலின் செல்லப் ள்ளை ஆகும் வாய்ப்பு அதிகம். ஓவரா செல்லம் கொஞ்சிடப் பாறாங்க.

வ குவாட்டர் கட்டிங். ட்ரெய்லரிலேயே படத்தின் இயக்குனர்கள் புஷ்கர் - காயத்ரி ரட்டியிருக்கிறார்கள். இதுவும் தயாநிதி அழகிரி வெளியீடுதான். சென்னை நகரின் இரவு ாழ்க்கைதான் கதை. ஜீ.வி.பிரகாஷின் இசையில் உன்னை கண் தேடுதே பாடல் ரீமிக்ஸ் ஆகி இருக்கிறது. ஜீ.வி.யும் ஒரு பாடலைப் பாடி இருக்கிறார். இந்தி வார்த்தைகள் அதிகமாக ள்ள ஒரு பாடலை படத்தின் ஹீரோ எழுதியிருக்கிறாராம். வ என்பதற்கு தமிழில் ஒன்றின் ழ் நான்கு என்று பொருளாம். எப்படியெல்லாம் மீனிங் கண்டுபுடிக்கறாங்க ஸார்.

# ...சூர்யா ...அபின் மாதிரி!

துக்காராமின் பாடல்களைக் கேட்டு மகிழ்ந்தவர்கள் தங்களால் இயன்ற பொருட்களை அவருக்கு வற்புறுத்தி அளித்தனர். அதை வீட்டுக்கு எடுத்துச் செல்லாமல் ஏழைகளுக்கு அளித்துவிடுவது துக்காராமின் வழக்கமாக இருந்தது.

ஆனால் தினமும் தன் கணவர் வெற்றுக் கையுடன் வீடு திரும்புவதைக் கண்டு கமலா பாய்க்குக் கோபம் நாளுக்குநாள் அதிகரித்து வந்தது.

ஒருநாள் அன்பர் ஒருவர் துக்காராமுக்கு ஒரு கட்டுக் கரும்பை அளித்தார். அதில் இருந்து ஆளுக்கு ஒரு கரும்பு என்று தன்னைச் சுற்றி இருந்தவர்களுக்கு எல்லாம் அளித்துவிட்டு மீதமிருந்த ஒரே ஒரு கரும்புடன் வீட்டுப்படி ஏறினார் துக்காராம். தமது வீட்டு வாசலில் இருந்து நடந்ததைப் பார்த்துக்கொண்டிருந்த கமலாபாய்க்குக் கோபம் பொங்கியது.

''பாண்டுரங்க நாமத்தின் இனிமைக்கு முன் இது எம்மாத்திரம்?'' என்றபடி துக்காராம் தன்னிடம் மிகுந்திருந்த ஒற்றைக் கரும்பை மனைவியிடம் அளிக்க, சினம் தலைக்கேறிய நிலையில் அவள் அந்தக் கரும்பைக் கணவரின் தலைமீது ஓங்கி அடித்துவிட்டாள். துண்டாகி விழுந்த கரும்பினை அமைதியாகப் பொறுக்கி எடுத்துக்கொண்டு நகர்ந்தார் துக்காராம்.

தன் தவறை உணர்ந்த கமலாபாய் தன் கணவரிடம் மன்னிப்பு கேட்டுக் கொண்டாள்.

துக்காராமின் மகனுக்கு மணம் முடிக்கும் வயதானது. திருமணம் என்றால் அதற்கு நிதி வேண்டுமே. வீட்டில் சல்லிக்காசு இல்லை.

எனினும் இதற்காகத் துக்காராம் தானாகச் சென்று யாரிடமும் யாசகம் கேட்கக் கூடாது என்பதில் ஊர்மக்கள் உறுதியாக இருந்தனர். துக்காராம் மீது அவர்களுக்கு அவ்வளவு மரியாதை. அவரவர் சக்திக்கு ஏற்ப ஒவ்வொருவரும் குறிப்பிட்ட அளவு பணம் அளிக்கவேண்டும் என்றும், அதைக்கொண்டு துக்காராம் தம் மகனுக்கு மணமுடிக்க வேண்டும் என்றும் தீர்மானித்தனர். அதன்படியே நிதி திரட்டத் தொடங்கினர்.

ஆனால் ஊரில் மிகவும் கஞ்சனாகவும் மரியாதை தெரியாதவனுமாகிய ஒருவன் இருந்தான். அவன், தான் எந்தத் தொகையையும் துக்காராமுக்கு அளிக்க மாட்டேன் என்று கூறிவிட்டான். ஆனால் அவன் மனைவி துக்காராமின் தீவிர பக்தை. ''பணம் கொடுக்காவிட்டாலும் ஏதாவது பாத்திரத்தையாவது அளிக்க உத்தரவு கொடுக்க வேண்டும்'' என்று கெஞ்சினாள்.

# ருக்மிணிக்குப்

அவள் கணவனோ ஏளனமாக ''வீட்டில் ஏதாவது ஓட்டைச் செம்பு இருந்தால் அதை வேண்டுமானால் கொடுத்து அனுப்பு''




## தீராத விளையாட்டு விட்டலன்



# டவை தானம்!

என்றான்.

இதையே ஒரு நல்வாய்ப்பாகக் கருதிய அந்தப் பெண்மணி, தன் வீட்டில் இருந்த ஓட்டைச் செம்பு ஒன்றை யாசகம் பெற வந்திருந்தவர்களிடம் கொடுத்துவிட்டு, துக்காராம் வாழ்ந்து வந்த வீடு இருக்கும் திசையை நோக்கி நமஸ்கரித்தாள். 'இப்படி ஓர் அற்பமான பொருளை நாம் அளிக்கிறோமே' என்ற அவமான உணர்வில் அவள் கண்களில் நீர் ததும்பியது.

நிதி திரட்டிய ஊர் மக்கள் அதை துக்காராமிடம் அளித்தனர். உடைந்த, செம்பை அளிக்கும்போது, துக்காராம் அதைத் தவறாக எடுத்துக்கொள்ளக்கூடாதே என்பதற்காக அதன் பின்னணியை விளக்கினர்.

துக்காராம் அந்த உடைந்த செம்பை மிகவும் மதிப்புடன் எடுத்தார். அவர் அதைத் தொட்ட உடனேயே அந்தச் செம்பு தங்கமாக மாறி மின்னியது. ''கருமி என்று நீங்கள் குறிப்பிட்ட ஒருவரா எனக்குத் தங்கச் செம்பை அளித்தார்?'' என்று துக்காராம் கூற, ஊர் மக்கள் வியந்தனர்.

செய்தியைக் கேள்விப்பட்ட கருமியின் மனைவி துக்காராமிடம் ஓடோடி வந்தாள். கண்ணீர் பெருக்கெடுத்தோட நமஸ்கரித்தாள். ''நான் அளிக்கும் செம்புப் பாத்திரத்தை நீங்கள் தங்கப் பாத்திரமாக கருதி ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று நான் உங்களை மனதளவில் வேண்டியது உண்மைதான். அதை அப்படியே நடத்திக் காண்பித்து எனக்கும் ஓர் அந்தஸ்து அளித்துவிட்டீர்களே'' என்று விம்மலுடன் கூறினாள். பின் அவள்

அருண்சரண்யா

துக்காராமை பக்தியுடன் நமஸ்கரிக்க முயன்றாள். அப்போது தன் கூடவே வேறு ஒருவரும் நமஸ்கரிக்க முயல்வது கண்டு திரும்பினாள். அங்கே தலைகுனிந்தபடி காட்சி அளித்தது அவள் கணவன்தான். தனது குற்றத்தை உணர்ந்து திருந்தியிருந்தான் அவன்.

தனது மனமாற்றத்தை உணர்த்தும் விதத்தில் துக்காராமின் மகன் திருமணத்துக்காக பலவிதப் பொருளாதார உதவிகள் செய்தான். அதோடு நின்றுவிடாமல் தனது உடல் உழைப்பையும் தாராளமாக அளித்தான்.

துக்காராமின் காரணமாக விட்டலன் மீது ஊர் மக்கள் கொண்ட பக்தி அதிகமாகிக் கொண்டே போனது. ஆனால் ஊரே கொண்டாடினாலும் இது குறித்து அதிருப்தி கொண்ட ஆத்மா ஒன்றும் இருந்தது.

விட்டலன் மீது துக்காராமுக்குப் பக்தி எந்த அளவுக்குப் பெருகிக்கொண்டு போனதோ, அந்த அளவுக்குக் கமலாபாய்க்கு விட்டலன்மீது கோபம் அதிகமாகிக்கொண்டே வந்தது.

'வீட்டை கவனிக்காமல் விட்டல நாமம் எதற்கு?' இந்தக் கேள்விதான் கமலாபாயின் மனத்தில் ஓங்கி நின்றது.

அன்று ஏகாதசி. ஓர் ஏழைப் பெண் துக்காராமை அணுகினாள். 'எனக்கு உடுக்க மாற்றுத் துணி இல்லை. ஏதேனும் புடைவை இருந்தால் கொடுங்கள்...' என்றாள். துக்காராம் மனமிரங்கினார். அதற்குமேல் அவர் எதுவும் யோசிக்கவில்லை. காயப்போட்டிருந்த தன் மனைவியின் புடைவை ஒன்றை எடுத்து அந்த ஏழைப் பெண்மணிக்குத் தானமாக அளித்தார்.

இதை அறியாத கமலாபாய் சற்று நேரம் கழித்து, தன் தோழி வீட்டிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தபோது எதிரில் ஒரு பெண்மணி தன்னுடைய புடைவை போன்றே ஒரு புடவையை அணிந்து வருவதைப் பார்த்தாள். சந்தேகம் எழ, ''ஏது இந்தப் புடைவை?'' என்று கேட்டாள். தாழ்த்தப்பட்ட குலத்தைச் சேர்ந்தவளாகத் தோற்றமளித்த அந்தப் பெண் துக்காராம்தான் அந்தப் புடவையைத் தனக்கு கொடுத்ததாகக் கூறினாள்.

ஆக, அது தன்னுடையதைப்



# அபங்க அமுதம்

நிஜல்யானே கா தா உபா நாராயண
பை ஸல்யா கீர்தன கரிதா டோ லே
உபா ராஹோனிய முகீ நாம வதே
நாசே ஹா கோ விந்த நானா சந்தே
மாரகீ சாலதா முகீ நாம வாணீ
உபா சக்ரபாணீ மாகே புடே
துகா ம்ஹணே யாஸீ கீர்தனாசீ கோடீ
ப்ரேமே கா லீ உடீ நாமாஸாடீ

- பக்த துக்காராம்

"படுத்துக்கொண்டு பாடினால், நாராயணன் நின்றுகொண்டு கேட்கிறான். உட்கார்ந்து கொண்டு கீர்த்தனம் செய்தால், அசைகிறான். நின்று கொண்டு வாயால் நாமம் சொன்னால், அந்தப் பலவித மெட்டுகளுக்கு ஏற்ப, கோவிந்தன் ஆடுகிறான். வழியில் செல்லும் போது வாயால் நாமம் சொன்னால், சக்ரபாணி முன்னும், பின்னும் நின்று ரசிக்கிறான். அவனுக்கு கீர்த்தனத்தின் மீது ப்ரியம் இருப்பதால், அதைக் கேட்பதற்குப் பறந்தோடி வருகிறான்."



போன்ற புடைவை இல்லை, தன்னுடையதேதான். கோபம் தலைக்கேறியது 'எல்லாம் இந்த விட்டலனால் வந்த வினை. என் கணவரை ஆனாலும் ஆட்டிப்படைக்கிறான். இன்றைக்கு இதற்கு ஒரு முடிவு கட்டியே ஆகவேண்டும்.'

ஆத்திரம் மிக, நேராக விட்டலனைத் தேடிப் புறப்பட்டாள். சும்மா அல்ல; கையில் ஓர் அம்மிக்கல்லுடன்!

அவள் கால்கள் விட்டலின் ஆலயத்தை நோக்கி ஓடின. ஊரார் விவரத்தைக் கூற, துக்காராம் வேகமாக அவளைப் பின் தொடர்ந்தார். அவளைத் தடுக்க முயன்றார். பலனில்லை. கமலாபாய் கடும் வேகத்துடன் ஓடினாள். அவ்வளவு ஆவேச வெறி.

இதுகண்டு ருக்மிணி திடுக்கிட்டாள். "உங்கள் பக்தன் துக்காராமுக்கு மேலும் புண்ணியம் சேரவேண்டும் என்பதற்காக நான் ஏழைப் பெண்ணாகச் சென்று அவரிடமிருந்து புடைவையைத் தானமாகப் பெற்றேன். அது இப்படி ஒரு விபரீதமாக மாறிவிட்டதே!" என்று வருத்தப்பட்டாள்.

கண்ணன் புன்னகைத்தான்.

ருக்மிணி சற்றே தயக்கத்துடன் "துக்காராமின் உன்னதத்தை கமலாபாய் உணராதது வருந்தத் தக்கதுதான். எனினும் உலக பந்தத்தில் உழலுபவர்களின் ஒரு சராசரி பிரதிநிதியாக விளங்கும் கமலாபாயை என்னால் வெறுக்கமுடியவில்லை" என்றாள் ருக்மிணி. அடுத்த நொடியே தோன்றிய கண்ணனின் அருட்பார்வை எதை உணர்த்துகிறது என்பதை அவளால் புரிந்துகொள்ள முடிந்தது.

கமலாபாய் ஆலயத்துக்குள் நுழைந்து அடுத்த நொடியே ஆலயத்தின் கதவுகள் தாமாகவே மூடிக்கொண்டன. ஆலயமணி இடைவிடாமல் ஒலிக்கத் தொடங்கியது.

கமலாபாயின் எதிரே ருக்மிணி தேவி காட்சியளித்தாள். தேவியின் அருட்பார்வை, அவரது பாத தரிசனம் இவற்றைவிட கமலாபாயின் கவனம் வேறொன்றில் பதிந்தது. அது ருக்மிணிதேவி அணிந்திருந்த புடைவை. தான் காயப்போட்டிருந்த, தன் கணவர் தானமாக அளித்த அதே புடைவை. 'அப்படியானால் தன் வீட்டுக்கு வந்தது ருக்மணி தேவியா?' கமலாபாய் உடல் நடுங்க உண்மையை உணர்ந்தபோதே ருக்மிணி மறைந்தாள். கமலாபாயின் மாயை நீங்கியது. விட்டலன் - ருக்மிணி திருவுருவங்களை மும்முறை வலம் வந்தாள். தான் செய்த பிழைகளை மன்னிக்குமாறு கதறினாள்.




வாசகர்களே! உங்க க்யூட் கவிதைகளைச்
சீக்கிரமா 'கவிதை கஃபே'ன்னு குறிப்பிட்டு அனுப்புங்க...
kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.
'கவிதை கஃபே' பகுதியில்
இடம்பெறும் கவிதைகளுக்கு
சன்மானம் உண்டு
உனக்குள்
பறக்கும் பறவை
நுழைந்து
வெளியேற முடியாக்
கருவேலங்காடு
செழித்து வளர்கிறது
உனக்குள்
குச்சியொன்றைக்
கவ்விக் கொண்டு
கூடு கட்ட
பறந்து வருகிறது
என் பறவை.
- நாணற்காடன்

## வார்த்தைகளால் ஆனவள்

வார்த்தைகளால் ஆனவளை
இன்று பேருந்தில் சந்தித்தேன்
வெறும் வார்த்தைகளால் மூடப்பட்டிருந்தது
அவள் உடம்பு.
கண் இருக்க வேண்டிய இடத்தில்
கண் என்று எழுதியிருந்தது
காது மூக்கு என அனைத்துக்கும் அப்படியே
விகாரமில்லாமல் அழகாகவே இருந்தாள்
நீ யார் என்றதற்கு
மெல்லிய புன்னகை ததும்பியவளாக
வாய் திறந்தாள்.
வார்த்தைகள் ஒவ்வொன்றாகக் கீழே விழுந்தன
விழுந்த வார்த்தையைப் பொறுக்கிச்
சட்டைப்பைக்குள் போட்டுக் கொண்டேன்
சட்டை நிரம்ப நிரம்பப் பேசினாள்
அப்படி நிரப்பப்பட்ட வார்த்தைகளைக் கொண்டு
எழுதப்பட்டதுதான் இந்தக் கவிதை.

## கனவுகளால் ஆனவள்

கனவுகளால் ஆனவளை...
வார்த்தைகளால் ஆனவளைச் சந்தித்த
அதே பேருந்தில் இன்று சந்தித்தேன்
கண்ணை மூடி கனவு கொண்டிருந்தாள்.
என்னைப் பற்றி அவள் கனவு என்னவாக இருக்கும்
என்ற எண்ணத்தில் அவளையே உற்று நோக்கினேன்.
மெல்ல கண் திறந்தவள்,
இங்கே என்ன செய்கிறாய் என்றாள்
எனக்குக் கனவுகளே வருவதில்லை என்றேன்,
இந்தா பிடி! என மூன்று மூட்டைக்
கனவுகளைக் கொடுத்தனுப்பினாள்.
தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு வீடு சேர்ந்தேன்,
முதல் மூட்டையைப் பிரித்து மூன்றாம் கனவை
எடுத்துப்பார்த்தேன்
அதில் நீங்கள் அனைவரும்
இந்தக் கவிதையைப் படித்துக் கொண்டிருக்கிறீர்கள்

- அடலேறு

## பயணச் சாலை

ஓவியத் தூரிகை
நளினமாகச் சொட்டிய
கர மையால்
வளைந்தும் நெளிந்தும்
நீண்டிருந்தது சாலை

பகலின் மிருகம் மூச்சிரைத்த
சாலையின் வெக்கையைத்
தணிக்க முடிவதில்லை
தார்ப் பூச்சின் எண்ணிட்ட
எந்த மரத்தாலும்

இரவு வந்து
போர்த்திய பின்னும்
உறங்குவதில்லை
மின்மினுக்கும்
சாலைகள் ஒவ்வொன்றும்

புள்ளியில் தொடங்கி
புள்ளியில் முடியும்
எந்தப் பயணத்தை
இணைத்திருக்கும்
ஏதோ ஒரு சாலை.

- லாவண்யா சுந்தரராஜன்

கவிதை கஃபே



இது எங்கள் கல்யாண ஃபோட்டோ. பின்புறம் அமர்ந்திருப்பவர்கள் அனைவரும் சிரித்துக் கொண்டிருப்பதால் நான் கூறிய ஏதோ ஒரு ஜோக்கை (ஜோக் ஞாபகத்தில் இல்லை) ரசிக்கிறார்கள்.

அந்தக் கல்யாணத்தன்று வெளியூரிலிருந்து வந்திருந்த உற்றார் உறவினர்கள் பிற்பகல் சாப்பிட்டுவிட்டு இரயிலையும், பேருந்தையும்

ஃபோட்டோவுடன் வெளிவரும் ஒவ்வொரு அனுபவத்துக்கும் பரிசு ரூ.50/-

ஜனதா கட்சி தொடங்கப்பட்ட சில மாதங்களில் தமிழ்நாட்டில் சுற்றுப்பயணம் வந்திருந்தார் சந்திரசேகர். அப்போது மதுரை வர்த்தகச் சங்கத்தில் தொண்டர்கள் சந்திப்புக் கூட்டம் நடத்தினோம். நான் வார்டு தலைவர் என்ற முறையில் சந்திரசேகரிடம் டைரியை நீட்டி ஆட்டோகிராஃப் கேட்டேன். பல கேள்விகளை வீசி - பதிலைப் பெற்ற பிறகு கையெழுத்திட்டுக் கொடுத்தார். இந்தக் கறுப்பு - வெள்ளைப்படம் நான் பாதுகாத்து வரும் படங்களில் ஒன்று.

- இரா. கல்யாணசுந்தரம், மதுரை - 9





கும்பகோணம் நகராட்சிப் பணியாளர் விடுதியில் நண்பர்களுடன் பெருந்தலைவர்

காமராஜரைச் சந்தித்தோம். அறிமுகப்படுத்திக் கொண்டு அவர்களின் வாழ்க்கை வரலாற்றை, சிறிய புத்தகமாகத் தயாரித்துள்ள விவரத்தைக் கூறி, புத்தகத்தை அளித்தோம். உருவத்தைப் பார்த்துவிட்டு, நீங்கள்தான் எழுதினீர்களா என வியப்புடன் கேட்டதுடன், 'நன்றாக இருக்கிறது. படிப்பில் கவனம் செலுத்துங்கள்' என அறிவுரை வழங்கினார்.

- இடவை எஸ். உமாபதி, கும்பகோணம்

பிடிக்கச் சென்றவர்கள், ஒவ்வொருவராக சுமார் 200 பேர் மாலை 5 மணிக்குக் கல்யாணச் சத்திரத்துக்கே திரும்பி வந்தனர். அவர்கள் திரும்பி வந்ததன் காரணம், அன்று தில்லியிலிருந்து சென்னை வந்திருந்த இந்திரா காந்திக்கு அரசியல் கட்சிகள் கறுப்புக் கொடி காட்டி ஆர்ப்பாட்டம் செய்திருந்ததால், சில இரயில்கள், பஸ்கள் ரத்து செய்யப்பட்டன.

இதனால் பெண் வீட்டார், அனைவருக்கும் இரவு உணவுக்கு ஏற்பாடு செய்தனர்.

நல்லவேளை, இன்று இது மாதிரி நடந்திருந்தால் சாப்பாட்டுக்குச் சுமார் அறுபதிலிருந்து எழுபது ஆயிரம் கூடச் செலவு செய்ய வேண்டியிருந்திருக்கும்.

- ஆரம். பாண்டுரங்கன், அகமதாபாத்

# ஆஹா ஆல்பம்

**ம**துரை எழுத்தாளர் மன்ற ஆண்டு விழா. விழாத் தலைவர் இரா.நெடுஞ்செழியன். கவியரங்கத் தலைவர் கண்ணதாசன். எழுத்தாளர் மன்றத் தலைவர் பேராசிரியர் மா.இராசமாணிக்கனார். நெடுஞ்செழியன் பக்கத்தில் நான் மற்றும் கவிஞர்கள்.

நான் 'ரவி' என்ற பெயரிலேயே என் கவிதைகளை எழுதி வந்தேன். எனக்கு 'ரவிக்கவிஞர்' என்ற பட்டத்தைத் தந்தவர் கவியரசர் கண்ணதாசன். என் கவிதைக்கு முன்னுரையில் கவிதையிலேயே எனக்குக் கவிஞர் பட்டம் தந்த கவிதை இதோ:

**அவைப்புலவர் தாலாட்ட**
**அரசகுலம் சீராட்ட**
**கவிக்குலத்தின் ஏடுகளால்**
**காலத்தின் புயல்கடந்து**
**புவிமுழுதும் புகழ்ந்தேத்தப்**
**பொருந்திவளர் தமிழ்மொழியை**
**ரவிக்கவிஞர் தன் கவியால்**
**நாட்டுவார் இவ்வவையில்!**

- கு.திரவியம், சென்னை




எனது சிறிய மாமனார் சங்கரபாண்டியன் பிள்ளை, காங்கிரஸில் மாவட்டத் தலைவராக இருந்தபோது, தூத்துக்குடி துறைமுகத்தை விரிவுபடுத்தியதைத் திறந்து வைக்க ஸ்ரீமதி இந்திரா காந்தி அம்மையார் வந்திருந்தார். வரவேற்பு நிகழ்ச்சியில் எனது மாமனார், எனது மகளையும் நாத்தனாரையும் மேடைக்கு அழைத்து, இந்திராகாந்திக்கு மாலைபோட்டு வரவேற்க வைத்ததை மறக்கவே முடியாது. இப்படத்தை எங்களது பொக்கிஷமாகக் கருதுகிறோம். நாட்டுத் தலைவியை வரவேற்ற குதூகலம் இருந்தாலும் அவரிடம் ஆட்டோகிராஃப் வாங்க என் நாத்தனார் பதற்றத்துடன் நிற்பதைப் பாருங்களேன். (கையில் வாட்ச் கட்டியிருப்பவர்)

- என். பாப்பா, திருநெல்வேலி-2



## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான சிறுகதைகள்

**11**

**வெ**யில் தகித்தது. ஸ்டிக்கர் பொட்டு வியர்வையில் வழிந்து விழுந்துவிட்டது. போனதும் பொட்டு வைத்துக்கொள்ள வேண்டும். 'ஸ்லோக மாமி' வசந்தி வெறும் நெத்தியா வெளியில் போக முடியுமா? தலை முழுக்கப் பூத்துவிட்டது. ஐம்பது வயதுக்குள் இப்படி நரைத்துவிடுமா? சாரங்கனுக்கும் தலை நரைத்துவிட்டது. அவன் தன்னை விட எட்டு வயது பெரியவன். அதற்கு அந்த நரை பரவாயில்லை. இந்த இடத்துக்கு ஸ்லோக மாமி என்ற பெயருக்கு இந்த வேஷம் பொருத்தமாக இருக்கிறது. லலிதா சஹஸ்ரநாமம் சொல்லிக் கொடுத்து முடித்ததற்கு வெள்ளி சந்தனப் பேலா கிடைத்தது. ஆரம்பித்த புதிதில் எல்லாப் பெண்களும் ஐந்தும் பத்துமாகப் போட்டு டிபன்காரியர், எவர்சில்வர் கூஜா என்று கொடுத்தார்கள். இப்போது எல்லோர் கையிலும் பணம் புழங்குகிறது. யார் வீட்டுக்குப் போனாலும் நல்ல பிளவுஸ் துண்டு வைத்துத் தருகிறார்கள். ஒவ்வொரு ஸ்லோகம் முடியும் போதும் வெள்ளியில் ஏதாவது தருகிறார்கள். பரவாயில்லை. நந்தினி கல்யாணத்துக்குச் சேர்த்து விடலாம்.

முப்பது வருஷத்துக்கு முன்னால் தனக்கு, மெட்ராஸ் டவுனில் இருக்கும் ஒரு மூத்திரச் சந்து சத்திரத்தில் தர்மாவரம் பட்டு உடலில் கசகசக்கக் கல்யாணம்.

நந்தினி கல்லூரியில் இருந்து வந்து விடுவாள். வெள்ளிக்கிழமை ஆயிற்றே. சாரங்கன்கூட ஐந்து மணி டிரெய்ன் பிடித்து ஆறரை மணிக்குள் வந்து விடுவான். வீட்டுக்குப் போய் ஏதாவது சூடாகச் செய்ய முடியுமா என்று தெரியவில்லை. போகிற வழியில் ரமணா போளி ஸ்டாலில் வாங்கிக் கொண்டு போய் விடலாம். ராத்திரிக்கு மோர் சாதம் சாப்பிட்டு விடலாம்.

சாரங்கனும் மெஷின்போல குரோம்பேட்டையிலிருந்து ஏழு பத்து வண்டி பிடித்து மணலிக்குப் போய், சாயங்காலம் ஐந்து நாற்பது டிரெய்ன் பிடித்து ஏழரைக்கு வீட்டுக்கு வந்து, எட்டு மணி செய்திகள் கேட்டுவிட்டு, தேன் கிண்ணம் கேட்டுக்கொண்டே தூங்கி, அப்படியே கல்யாணம் செய்துகொண்டு, தம்பி, தங்கைகளுக்குக் கல்யாணம் செய்து, அதில் அதிசயமாக ஒரே ஒரு பெண் குழந்தையைப் பெற்று வளர்த்து, அம்மாவுக்குக் கொள்ளி போட்டு இன்று தலையெல்லாம் நரைத்த பிறகும் அதே டிரெய்ன், அதே ஓட்டம் ஓடிக்கொண்டிருக்கிறான். இப்போது விவித்பாரதிக்குப் பதில் சன் டி.வி.

**ர**மணா போளி ஸ்டாலில் கூட்டம் பொங்கிக் கொண்டிருந்தது. வாசு மாமா இவளைப் பார்த்துச் சிரித்தார்.

''ஏது மோகனாம்பிகை கேட்டரர்ஸ் இங்கே வந்து என்ன வாங்கறா?'' என்று கேட்டார்.

பதிலுக்குச் சிரித்துக்கொண்டே ''மத்தவா கடையில என்ன டேஸ்ட்டுன்னு தெரிஞ்சுக்கத் தான்!?''

''வசந்தி மாமிக்கு பஜ்ஜியும் சமோசாவும் கட்டிக் கொடுடா! மாமியார் வருஷாப்திகத்துக்கு, மச்சினன் வந்தானா?,'' என்று பேச்சைத் தொடர்ந்தார்.

''மாமா! ஆத்துப் பக்கம் வாங்கோ பேசலாம். உங்களுக்கும் வியாபாரம் நடக்கிற இடம். எனக்கும் அவசரமா போகணும்,'' என்று கிளம்பினாள்.

வாசு மாமாவுக்கு வம்பு அதிகம். முரளியும் கீதாவும் வீட்டை விற்று எல்லோருக்கும் பங்கு கொடுத்துவிடு என்று கேட்டது தெரிந்துதான்

வாயைக் கிண்டுகிறார்.

''வீடு தனி வீடா இருக்கறதுனாலே முப்பது லட்சம் போகும்ங்கறா. வித்துட்டா எல்லோருக்கும் பங்கு கிடைக்கும். இல்லேன்னா நீ ஒரு விலை போட்டு எடுத்துண்டு எங்க எல்லோருக்கும் பணத்தை செட்டில் பண்ணிடு!''- இது முரளி. சாரங்கன், ''இப்ப என்ன வீட்டை வித்துட்டு, பணம் வாங்கற முடை! நீங்க வந்தாப் போனா தங்கறதுக்கு நம்ம வீடுன்னு ஒண்ணு இருக்கு! நந்தினிக்குக் கல்யாணம் ஆச்சுன்னா நாங்க கிளம்பிடுவோம். பாத்துக்கலாம்'' என்று பேசியது, வசந்திக்கு ஆச்சரியமாக இருந்தது.

மோகனாவும் தனக்கு எந்தச் சம்பந்தமும் இல்லை என்பது போல் இருக்கிறாள். இதில் அவள் நடத்திக் கொண்டிருக்கிற கேட்டரிங்



''தினமும் வீட்டுக்கு லேட்டாவே வர்றீங்களே! உங்க மனசுல என்ன நினைச்சுக்கிட்டிருக்கீங்க?''

''உன்னைத்தான்டி - இல்லேன்னா வீட்டுக்குச் சீக்கிரமா வந்துடமாட்டேனா?''

- எம். அசோக்ராஜா

வியாபாரம் தன்னுடையதுபோல் மாமா செய்த நக்கல் இருக்கிறதே!

நன்றாகப் படித்து சிவில் சர்வீஸ் பரீட்சை எழுதி பெரிய வேலையில் இருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டு அந்தப் பிரபல கல்லூரியில் ஆங்கில இலக்கியத்தில் சேர்ந்தாள். பெசன்ட் நகரிலிருந்து 23A பஸ் பிடிக்கச் சிட்டுக்குருவிகள் போல் கூட்டமாகக் கிளம்புவார்கள். பெண்கள் ஸ்பெஷல் பஸ்ஸை வேண்டுமென்றே தவறவிட்டு அடுத்த பஸ்ஸில் போகும் குறுகுறுப்பான பருவம். பெசன்ட் நகர் வீட்டிலிருந்து கடல் தெரியும். எதிரே மரங்களில் சாயங்காலமானால் கிளிகள் வந்து கீச்சிடும். இப்போது அந்தக் கடலும் எங்கோ தள்ளிப் போய்விட்டது. அந்த வாழ்க்கையும் மனத்தை விட்டு விலகிப் போய்விட்டது. அப்பா திடீரென்று செத்துப் போனதும், அம்மாவின் பாதுகாப்பின்மையை மாமா நன்றாகப் பயன்படுத்திக் கொண்டாரா? தெரியவில்லை.

''இந்த வீட்டை வித்துட்டு என்னோட மடிப்பாக்கம் வந்துடு. வசந்திக்கு நல்ல வரன் இப்பவே காத்துண்டு இருக்கு! என்னோட கேட்டரிங் பிஸினஸ் இப்ப நன்னா பிக்-அப் ஆயிண்டு இருக்கு. நீயும் மோகனாவுமா எனக்கு ஒத்தாசை பண்ணிண்டு இருங்கோ!'' என்றார். அம்மாவுக்கு ஆபத்பாந்தவனாய் மாமா தெரிந்தார். மோகனாவுக்கு எப்போதுமே படிக்கப் பிடிக்காது. இதுதான் சாக்கு என்று சந்தோஷமாக இருந்துவிட்டாள். மறு வருஷமே மாமாவின் உதவியாளன் சீனிவாசனைப் பிடித்துக் கல்யாணம் செய்துகொண்டுவிட்டாள்.

''குரோம்பேட்டைல சொந்த வீடு! பெரிய அக்காவுக்குக் கல்யாணம் ஆயிடுத்து. அடுத்தது மாப்பிள்ளைப் பையன். அப்புறம் ஒரு தம்பி, தங்கை. மாமி நல்ல சாமர்த்தியம் தனி ஆளா பெரிய பொண்ணுக்கு ஏதோ சேத்துப் பண்ணி வெச்சுட்டா! அடுத்தவளுக்கும் சேத்து வெச்சிருக்காளாம்.

பையனுக்குக் கெட்டப்பழக்கம் எதுவும் கிடையாது'' என்று சொல்லி, கல்யாணத்தைச் சிக்கனமாக முடித்துவிட்டார்.

வசந்தியிடம் உனக்கு என்ன பிடிக்கும்? இதற்குச் சம்மதம்தானா என்று யாரும் கேட்டதாக நினைவு இல்லை. அம்மா உயிருடன் இருந்தவரை தன் வாழ்க்கையைப் பார்த்து சந்தோஷப்படவில்லை.

'என்னடி இது? சாப்பாட்டுக்குக் கூடவா இந்தச் சிக்கனம்? கீரையும் பூசணியும் அப்படி என்ன வெலை விக்கறது? அத வாங்கிப் பண்ணிப் போடலாமே? ஊள மோரும் நார்த்தங்காயும் தின்னு நீயும் காஞ்சுப்போய்ட்டியே?' என்று புலம்புவாள். இரண்டு வாரத்துக்கு ஒருமுறை அம்மாவைப் பார்க்க என்று வசந்தியும் சாரங்கனும் கிளம்புவார்கள்.

''நல்ல பூவன்பழம் பாத்தேன். இந்தா! உங்கம்மா ஆத்துக்குப் போறியே! எடுத்துண்டு போ. அங்கேயே பட்சணமும் எண்ணெயுமா கெடக்கும். நீ வேற பட்சணத்தை வாங்கிண்டு போகாதே'' என்று மாமியார் கொடுக்கும் பழத்தைப் பார்த்தால் அவமானமாக இருக்கும். சாரங்கனிடம் சொன்னால் ''அம்மா! அப்படிக் கணக்குப் பாத்தே பழகிட்டா! '' என்பான். அங்கே வந்து வெட்கமில்லாமல், ''போன தடவ வந்தப்போ சூடா ஜாங்கிரி கொடுத்தேளே! இந்தத் தடவ போடலையா?'' என்று சாரங்கன் கேட்டதும், சீனிவாசன் ''என்ன மாமி மாப்பிள்ளை, பொண்ணுக்கு மசக்கை வரவழைக்கக் காணும்? அவருக்கு மசக்கை வந்த மாதிரி சூடா ஸ்வீட் கேக்கறாரே?'' என்று விகண்டையாகக் கேட்டான்.

**வ**சந்திக்குக் கல்யாணம் ஆகி அப்போது நாலு வருடம் ஆகிவிட்டது. அதற்குள் மோகனா முதல் பெண் பெற்று இரண்டாவது உண்டாயிருந்தாள். ஐந்து வருடம் கழித்து சாரங்கனிடம், டாக்டரிடம் போகலாமா என்று கேட்டாள் வசந்தி. அது கேட்டு பதில் வராமல் மூன்று வருடங்கள் கழித்துதான்




கர்ப்பம் என்று உணர்ந்த நாளை அவளால் மறக்க முடியவில்லை. அம்மா, ''என்னடி வேணும்? வாய்க்கு ருசியா இப்பவாவது உங்க மாமியார் பண்ணிப் போடறானா? நான் உன்னை ரெண்டு நாள் வெச்சுக்க முடியாதபடி ஆய்டுத்தே!'' என்று புலம்பினாள்.

''மோகனாதான் இந்தப் பட்சணத்தை எடுத்துண்டு போய் வசந்திய பாத்துட்டு வான்னு கொடுத்தாடி'' என்று அம்மா கொடுத்த பட்சணம் அரை மணியில் காலியானது.

''ஏண்டி! காணாது கண்டது மாதிரி திங்கறாளே! நீ தெனமும் கடைசியா சாப்பிடறச்சே கறி, கூட்டு ஏதாவது மிச்சமிருக்குமா?'', அம்மாவின் கேள்வியில் உண்மை இருந்தது.

நந்தினி பிறந்தபோது பார்க்க அம்மா இல்லை. மோகனா வந்து பார்த்துவிட்டு ''உன்ன மாதிரியே புத்திசாலியா இருக்கட்டும்'' என்றாள். என்ன புத்திசாலி? ஒன்றுக்கும் பிரயோஜனமில்லாப் புத்திசாலித்தனம்?

மோகனா மடிப்பாக்கத்தையே வளைத்துப் போடும் அளவுக்குச் சம்பாதிக்கிறாள். இரண்டு குழந்தைகளும் அமெரிக்காவில் இருப்பதால் சமயம் கிடைத்தால் அமெரிக்கா போய்விடுவதாகவும் சொன்னாள்.

“எங்கம்மா போய்ட்ட? ஒரே பசி! நீ வருவேன்னுதான் காத்துண்டு இருக்கேன்,'' என்ற நந்தினி வசந்தியின் கையில் இருந்த பொட்டலங்களைப் பிரித்தாள்.

''வந்தவுடனே டி.வி.யா? வாச லைட்ட போடக்கூடாதா?''

''அம்மா! அறுக்காதே! இன்னிக்கு செமெஸ்டர் எக்ஸாம் முடிஞ்சு ஃப்ரீயா இருக்கேன். அப்பா வந்தா சேந்து 'இரும்புக் கோட்டை முரட்டுச் சிங்கம்' போலாம்'' என்ற பெண் அப்பா செல்லம். வசந்திக்குச் செய்யாததையெல்லாம் பெண்ணுக்குச் செய்தான் சாரங்கன். அப்பா வா என்றால் ஓடுவான். பெண் நைட் ஷோ சினிமா போகலாம் என்றால் ஆட்டோ பிடித்துக் கொண்டு வருவான்.

''சரி வா உக்காரு காஃபி ஷோ பாக்கலாம்'' என்று நந்தினி கூப்பிட்டாள்.

''வணக்கம் பரத் சார்! நீங்க காலேஜ் படிக்கும்போது காலேஜ் கேர்ள்ஸ்கிட்ட ரொம்ப பாப்புலராமே. உண்மையா?''

நேர்முகம் எடுக்கும் பெண் காது வளையங்கள் ஆட கேள்விகள் கேட்கத் தொடங்கினாள்.

அதற்கு அவன் அழகான சிரிப்புடன் ''ஆமாம்மா! 23A பஸ்ஸுல மோகன் உனக்கும் சேத்து டிக்கெட் எடுத்தாச்சன்னு நிறைய கேர்ள்ஸ் சொல்லுவாங்க! அப்ப என் பேர் மோகன்குமார். சினிமாவில் சேந்தப்புறம் பரத்குமார்ன்னு மாத்தினேன்.''

''இப்ப அந்த கேர்ள்ஸ் யாரையாவது ஞாபகம் இருக்கா? ''

''நிறைய பேர ஞாபகம் வெச்சிருக்கேன். உஷா, விமலா, கீதா, மஞ்சு, பத்மினி, ம்ம் அதுல கண்டிப்பா ஒருத்தி சம்திங் ஸ்பெஷல் தான்! இது என் மனைவிக்குத் தெரியும்.''

கொஞ்ச நேரம் மௌனமாக அவன் மனைவியைக் காட்டுகிறார்கள்.

''தெனமும் எனக்காக லேடீஸ் ஸ்பெஷல் பஸ்ஸ விட்டுட்டு பெசன்ட் நகர் பஸ் ஸ்டாண்டுல நான் ஏறுற பஸ்ஸுல அவளும் ஏறுவா. பாத்துக்கிட்டே இருப்போம். கொஞ்ச நாள்ல இது பஸ்ஸுல எல்லோருக்கும் தெரிஞ்ச ரகசியமாயிடுச்சு!''

அந்தப் பெண் இடையில் குறுக்கிட்டு



''ரொம்ப அழகா இருப்பாங்களா?'' என்று கேட்டாள்.

''நான் இப்ப உலக அழகிக்கூட நடிச்சிக்கிட்டு இருக்கேன். அதையெல்லாம் வெச்சி அவள் அழகை நான் சொல்ல முடியாது. என்னோட அம்மா அழகின்னு நம்பினா அவளும் அழகான பெண்தான்.''

''உங்கக் காதலை அவங்கக்கிட்டச் சொன்னீங்களா?''

''இப்ப மாதிரி காதலர் தினம் கொண்டாடறது. எஸ்.எம்.எஸ். அனுப்பறதெல்லாம்

அப்போ கிடையாது. அதனால நான் என் காதல அவகிட்டச் சொல்லவேயில்ல.''

''தனியா சந்திச்சுப் பேசியிருக்கீங்களா?''

''அவ வீடு வரைக்கும் தெனமும் போவேன். ஃபைனல் இயர் எக்ஸாமுக்கு முன்னால் காலேஜுல கடைசி நாள். பீச் பக்கம் பஸ் திரும்பனப்ப அவளுக்கு இறங்கச் சொல்லிக் கையக் காண்பிச்சுட்டு நான் ஓடுற பஸ்ஸுலேந்து குதிச்சேன். அவளும் அடுத்த பஸ் ஸ்டாப்புல இறங்கிட்டா! அப்பத்தான் ரெண்டு பேரும் முத தடவையா தனியா சந்திக்கறோம். பெரிசா ஒண்ணும் பேசலை. பீச் பக்கம் நடந்தோம். எம்பேரு என்னன்னு தெரியுமான்னு கேட்டேன். சிரிச்சுக்கிட்டே மூக்கன்னு சொன்னா. கேர்ள்ஸ் மத்தில எம் பேர் மூக்கன்னு அப்பத்தான் தெரிஞ்சது.''

''அப்படியா! உங்க மூக்கு ரொம்ப அழகான ரோமானிய மூக்குன்னு நெனச்சேன்.''

''அப்ப கொஞ்சம் ஒல்லியா இருப்பேன். அதனால் எம்மூக்கு கொஞ்சம் நீளமா தெரிஞ்சது. இப்ப சதை போட்டு மூக்கு உள்ளே அமுங்கிப் போச்சு.''

''காதல் கடிதம் ஏதாவது?'' கேள்வி தொடருகிறது.

''காதல் கடிதம் இல்லை. ஆனா அவ எழுதி வெச்சிருந்த ஒரு பேப்பர எங்கிட்ட கொடுத்தா. ''வாட் இஸ் ஹாப்பினெஸ்'' ஒரு கட்டுரை. ஆர்.கே.நாராயணன் ஸ்டைலில் எழுதியிருந்தா.''

''அந்தக் காதல் என்னாச்சு?''

''எல்லாக் காவியக் காதலர்கள் மாதிரி நாங்களும் சேரவில்லை. எனக்கு இவள் மனைவி. அவளுக்கு யாரோ ஒருவன் கணவன். டிகிரி பரீட்சை எழுதிட்டு நா தில்லியில வேலை கெடச்சிப் போய்ட்டேன். கொஞ்ச நாள் கழிச்சு வந்து பார்த்தா ஆளக்காணும். அவ ஃப்ரெண்ட் ஒருத்தி அவளுக்குக் கல்யாணம் ஆயிடுச்சு. படிப்பையும் நிறுத்திட்டான்னு சொன்னா!''

''அந்த பேப்பர்ல என்ன எழுதியிருந்தது?''

''அந்த பேப்பர் இன்னும் எங்கிட்ட அவ நினைவு போல் பத்திரமா இருக்கு!

**''சந்தோஷம்ங்கறது நாம எங்கேயும் தேடிப் போய் கண்டுபிடிக்கிற விஷயம் இல்லை. அதுக்கு நிறைய பணம் வேண்டாம். வசதிகள் வேண்டாம். ஏன்னா அது நம்ம மனசுல இருக்கு. நம்ம சுத்தி இருக்கிற விஷயங்கள்ல இருக்கு! தூரத்தில் தெரியும் கடல், தென்னை மரம், சிட்டுக் குருவிகள், முழு நிலா, வானம் எங்கும் நிறைந்திருக்கும். நட்சத்திரங்கள் போல் பூமியில் எல்லா இடங்களிலும் இருக்கு. நம்மில் பாதிப்பேர் வானத்தைப் பார்ப்பதில்லை. அதனால நம்மைச் சுற்றியிருக்கும் சந்தோஷங்களையும் அனுபவிப்பதில்லை. இப்படி எழுதியிருப்பா.''**

## ''எனக்குள் இருக்கும் சந்தோஷங்களைக் கண்டுபிடித்துக் கொடுத்த அவள் என்றும் என் காதலி''

பரத்குமார் சொல்லிக் கொண்டிருக்கும் போது கேமரா அவன் முகத்தைப் பெரிதாக்கிக் காட்டியது.

அதையெல்லாம் இன்னுமா நினைவில் வைத்திருப்பான்? அடிவயிறு குழைந்தது வசந்திக்கு.

''எனக்குள் இருக்கும் சந்தோஷங்களைக் கண்டுபிடித்துக் கொடுத்த அவள் என்றும் என் காதலி'' என்று சொல்லி முடித்தான்.

''நீங்க இன்னும் அவங்க பெயரைச் சொல்லவில்லையே.'' அதற்கு அவன் என்ன பதில் சொல்கிறான் என்று பார்ப்பதற்குள் நேர்காணல் முடிந்துவிட்டது.

மனது இனம் புரியாமல் பொங்கி வழிந்தது. கிணற்றுப்பக்கம் சென்று வானத்தைப் பார்த்தாள் வசந்தி. வானம் முழுக்க நட்சத்திரங்கள்.



**அடுத்த கமல் என்றால் அது சூர்யாதான். வெரைட்டியான ரோலில் வெளுத்து வாங்குகிறார்.**



**எம்.எஸ்.பாஸ்கர் - நகைச்சுவை நடிகர்**

ஒழுக்கமான நடிகர்கள் சிலரில் சூர்யாவும் ஒருவர். அவருக்கு உடற்பயிற்சி தான் உயிர். அவர் நடித்த கஜினி படத்தின் கேரக்டரை நான் நகைச்சுவைக்காக நடித்தேன். அப்போதுதான் அதன் சிரமத்தை உணர்ந்தேன். சூர்யா எவ்வளவு இயல்பாக நடித்திருந்தார். வியப்பாக இருக்கிறது.

**வையாபுரி - நகைச்சுவை நடிகர்**

எப்பொழுதும் புதிய நடிகர் போலவே சக நடிகர்களிடம் பணிவு காட்டுவார். 'உயிரிலே கலந்தது' படத்தில் இவருடன் நடித்தேன். என்னுடைய பார்வையில் 'சூர்யாதான் அடுத்த கமல்!' எத்தனை வித்தியாசமான ரோல்களில் ரிஸ்க் எடுத்து வெரைட்டியாக கலக்குகிறார்.





**கவிதாலயா கிருஷ்ணன் - குணச்சித்திர, நகைச்சுவை நடிகர்**

'நேருக்கு நேர்' படம் மைலாப்பூர்லே, எங்க வீட்லேதான் ஷூட்டிங். சூர்யா அப்ப கொஞ்சம் பயந்த சுபாவம். ஒரு பிரபல நடிகரின் மகன் இப்படிப் பயப்படறாரேன்னு நினைப்பேன். சிவகுமார் சார் எங்கிட்டே வந்து, 'கிருஷ்ணா கொஞ்சம் தைரியம் சொல்லுப்பா' என்பார். அப்ப பூனை மாதிரி இருந்த சூர்யா இன்று புலியா மாறி ஃபைட், டயட், டூயட், எல்லாம் பின்னிப் பெடல் எடுக்கிறார். ஒழுக்கம் உயர்த்தும் என்பதற்கு சூர்யா உதாரணம்.

**சாம்ஸ் - நகைச்சுவை நடிகர்**

கமல் சாருக்குப் பிறகு நல்ல நடிகர், நன்றாக முகபாவனையுடன் நடிக்கத் தெரிந்தவர் நடிகர் சூர்யா ஒருவர்தான். வித்தியாசமாக, சிறப்பாக நடிக்கிறார். அவரின் கடுமையான உழைப்பு எனக்குப் பிடித்திருக்கிறது. வந்த படங்களைவிட அடுத்த படம் நன்றாக வர வேண்டும் என்று மெனக்கெட

# உடற்பயிற்சிதான் சூர்யாவுக்கு உயிர்!

**சத்யன் - நகைச்சுவை நடிகர்**

சிவகுமார் சாரின் ஜெராக்ஸ். யார் மனதும் புண்படக் கூடாதுங்கிறதிலே கவனம் செலுத்தக் கூடியவர். தன்னை இயல்பா வச்சுக்கிறதிலே தனித்தன்மை வாய்ந்தவர். அதோட சேவை மனப்பான்மையும் அதிகமா இருக்கும். உரிமையா தோள்லே கைபோட்டுப் பழகுற பந்தா இல்லாத அந்த நெருங்கிய பாசமான உணர்வு... இப்படிச் சொல்லிக்கிட்டே போகலாம்.





**ஜே.கே. - இயக்குநர் (தயாரிப்பாளர்)**

சிங்கம் படத்தில் ஆக்ஷனில் கலக்கியது போல், கமல் படமான நாயகன் போன்ற கனமான வேடத்திலும் நடிக்க வேண்டும் என்ற ஆசை. அதுதான் அவருக்குச் சிறப்பைத் தரும். 'ரத்த சரித்திரம்' படம் அவருக்கு ஹிந்திப் பட உலகில் நிலையான இடத்தை பெற்றுத் தரும் என்பது சந்தேகமில்லை. இந்திய அளவில் சிறந்த நடிகராக வருவார்.

**விஜய் கோபால்**

லோடு நிறைய தேடலும் அவரிடம் தெரிகிறது. அவர் குணத்துக்கு ஏற்றபடி நல்ல மனைவி அமைஞ்சிருக்காங்க. அது ஒரு வரம். டைரக்டர் என்ன கேட்டாலும் சலிக்காம நடிச்சுக் கொடுப்பாரு.



## பக்கங்கள்

**1. அ**ன்புள்ள துணை முதல்வர் மு.க.ஸ்டாலின் அவர்களுக்கு

வணக்கம்.

உங்கள் தனிச் செயலரின் எண்ணைக் கண்டுபிடித்து உங்களைச் சந்திக்க நேரம் வாங்கி ஒரு முக்கியமான சமூகப் பிரச்னையை உங்கள் கவனத்துக்குக் கொண்டு வர விரும்பினேன். அதற்குத் தாமதம் ஆகும் என்பதால் இந்தக் கடிதம்.

இந்த விஷயம் தொடர்பாக முதலில் என் மகன் மனுஷ் நந்தன் பற்றி சொல்கிறேன். அப்படிச் சொல்வது அவருக்குப் பிடிக்காது என்றாலும் சொல்லித்தான் ஆக வேண்டும். உங்கள் மகன் உதயநிதி தயாரிப்பில் கமல்ஹாசன் நடிக்க, கே.எஸ். ரவிகுமார் இயக்கும் 'மன்மதன் அம்பு' திரைப் படத்தின் ஒளிப்பதிவாளராகத் தற்போது பணியாற்றி வருகிறார். அதற்கு முன்பு அவர், பிரபல ஒளிப்பதிவு இயக்குநர் ரவி.கே.சந்திரனின் உதவி ஒளிப்பதிவாளராகச் சுமார் நான்காண்டுகள் மும்பையில் இந்திப் படங்களில் வேலை செய்தார். உதயநிதியின் மேற்படிப் படத்துக்கு ரவி.கே.சந்திரனைக் கேட்டிருந்தார்கள். அவர் தம் உதவியாளரான மனுஷ் நந்தனைப் பரிந்துரைத்ததால், மனுஷுக்கு இந்த வாய்ப்பு கிட்டியது.

ரவியிடம் வேலை செய்வதற்கு முன்னால் மனுஷ் நந்தன் தமிழக அரசு நடத்தி வரும் திரைப்படக் கல்லூரியில் ஒளிப்பதிவு பயின்றார். அதற்கு முன்னால் அவர் ப்ளஸ் டூ படிக்கும்போது நீங்கள் சென்னை மேயராக இருந்தீர்கள். உங்கள் நிர்வாகத்தின் கீழ் நடக்கும் மாநகராட்சிப் பள்ளியில்தான் என் மகன் படித்தார். அந்தப் பள்ளியைப் பற்றியும் படிப்பைப் பற்றியும்தான் இப்போது உங்கள் நடவடிக்கை உடனடியாகத் தேவைப்படுகிறது.



ஞாநி

என் மகன் ஒரு தனியார் மெட்ரிக் பள்ளியில் பத்தாவதை முடித்ததும், ப்ளஸ் டூவில் புகைப் படம் படிக்க விரும்பினார். அப்படி ஒரு பாடப்பிரிவு ப்ளஸ் டூவில் எங்காவது உண்டா என்று தேடினோம். இந்தியாவிலேயே, தமிழகத்திலேயே ஒரே ஒரு பள்ளியில் மட்டும்தான் அந்தப் பிரிவு இருக்கிறது. அதுதான் சூளைமேட்டில் இருக்கும் மாநகராட்சிப் பள்ளி. அந்த மாநகராட்சிப் பள்ளியில் என்னைப் போன்ற நடுத்தர வகுப்பினரின் குழந்தைகள் பெரும்பாலும் சேர்வதில்லை. ஏழை, பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் குழந்தைகளே 99 சதவிகிதம் படிக்கிறார்கள். திருவான்மியூர் - வீட்டிலிருந்து சூளைமேடுவரை தினசரி சென்று அங்கே படித்ததுதான், என் மகனின் வாழ்க்கையையே அவர் விரும்பிய சரியான தடத்தில் கொண்டு சென்றது.

முதல் வருட முடிவிலேயே மாணவர்களுக்கு ஓரளவு புகைப்படம் எடுக்கும் திறமை அங்கே புகட்டப்பட்டுவிடுகிறது. இரண்டாவது வருடம் படிக்கும்போதே ஓய்வு நேரங்களில் தெரிந்தவர்கள் வீட்டுத் திருமணம், சடங்குகள், கொண்டாட்டங்கள் முதலியவற்றுக்குச் சென்று புகைப்படம் எடுத்துத் தங்கள் செலவுக்கான தொகைகளைச் சம்பாதிக்கும் அளவுக்கு மாணவர்கள் தேர்ந்து விடுகிறார்கள். என் மகனும் அப்படித்தான் புகைப்படக்காரராக உருவானார்.

**அ**டுத்தபடியாக ஒவ்வோராண்டும் அங்கிருந்து குறைந்தது மூன்று பேர் முதல் ஐந்து பேர் வரை திரைப்படக் கல்லூரியில்

# ஸ்டாலினுக்கும், பொன்முடிக்கும் இரண்டு கடிதங்கள்!



ஒளிப்பதிவு, படத்தொகுப்பு, படம் பதனிடுதல் பிரிவுகளுக்குத் தேர்வாகிறார்கள். ஏழை எளிய, நடுத்தர வகுப்புகளிலிருந்து வரும் இளைஞர்களுக்கு இது ஒரு பெரும் பேறு. எந்தத் தனியார் நிறுவனத்திலும் புகைப்படக் கலையையோ திரைப்படக் கலையையோ பல லட்சம் ரூபாய்கள் செலவழிக்காமல் கற்கவே முடியாது.

இவ்வளவு சிறப்பான பாடப் பிரிவை இந்த ஆண்டுடன் மூடிவிடப் போவதாக உங்கள் நிர்வாகத்தின் கீழுள்ள மாநகராட்சி அறிவித்துள்ளது. இந்தியாவிலேயே ப்ளஸ் டூவில் புகைப்படம் கற்றுத்தரும் ஒரே பள்ளி இதை மூடுவதாக அறிவித்திருப்பது எனக்குப் பெரும் அதிர்ச்சியைத் தருகிறது.

இதை ஏன் மூடவேண்டும் என்ற கேள்விக்கு நியாயமான பதில் எதுவும் இல்லை. சேர்வோர் எண்ணிக்கைக் குறைவாக உள்ளது என்கிறார்கள். இப்படி ஒரு பாடப்பிரிவு இருப்பது இதர மாநகராட்சிப் பள்ளிகளில் பத்தாவது படிக்கும் மாணவர்களுக்கே கூடத் தெரியாது. விளம்பரமே செய்யாமல் ரகசியமாக நடத்திக் கொண்டிருக்கும்போது எப்படி மாணவர்கள் சேர்வார்கள்? ஒவ்வோராண்டும் நானே குறைந்தது ஒருவரை அங்கே சேர்த்து வருகிறேன்.

இன்னும் பல மாநகராட்சிப் பள்ளிகளிலும் தமிழகத்தின் இதர மாவட்டங்களிலும், மாவட்டத்துக்கு ஒரு அரசுப் பள்ளியிலேனும் கூட ப்ளஸ் டூ புகைப்படப் பிரிவைத் தொடங்கலாம். தொழிற் கல்வியின் கீழ் கற்றுத்தரப்படும் பாடப் பிரிவுகளிலேயே வாழ்க்கை வசதிக்கான வாய்ப்பை அதிகமாகத் தரக்கூடிய படிப்பு புகைப்படக் கலை. ப்ளஸ் டூவுக்குப் பிறகு படிக்காவிட்டாலும்கூட, புகைப்படக்காரராக நல்ல வருவாயுடன் கௌரவமாக வாழ்க்கையை நடத்த முடியும்.

பத்திரிகை, சினிமா, மீடியா, தொழிற் துறை, அறிவியல் துறை என்று பல துறைகளிலும் புகைப்படக்காரருக்கான வேலைவாய்ப்புகளும், ஸ்டூடியோ வைப்பது போன்ற சுய வேலைவாய்ப்பும் உள்ள படிப்பு இது. படிக்கிறபோதே கூட மாநகராட்சியின் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் இந்த மாணவர்கள் வந்து புகைப்படம் எடுக்க வேண்டும் என்ற உத்தரவைப் பிறப்பித்தால் அவர்களுக்கும் மாநகராட்சிக்கும் பெரும் பயன் ஏற்படும்.

எனவே நீங்கள் உடனடியாகத் தலை

யிட்டு, தமிழகத்துக்கும் சென்னை மாநக ராட்சிக்கும் பெருமை தரக்கூடியதாக உள்ள இந்தப் ப்ளஸ் டூ புகைப்படப் பிரிவை மூடும் உத்தரவை ரத்து செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். சூளைமேடு பள்ளியின் புகைப்படப் பிரிவின் முன்னாள் இந்நாள் மாணவர்களுடைய புகைப் படக் கண்காட்சி ஒன்றை மாநகராட்சி சார்பில் நடத்தவும் இந்தக் கல்விப் பிரிவு பற்றிப் போதுமான விளம் பரங்கள் செய்யவும் ஏற்பாடு செய் யுங்கள்.

சமூகத்தின் அடித்தட்டு மக்க ளுக்குப் பெரிதும் உதவக் கூடிய இந்தக் கல்விப் பிரிவைத் தொடர்ந்து நடத்த வெளி யிலிருந்து தேவைப் படும் உதவிகளை என்னைப் போன் றோர் எப்போதும் செய்யத் தயாராக உள்ளோம். ஏற்கெ னவே சூளைமேடு பள்ளியின் புகைப் படப் பிரிவுக்கு உதவு மாறு விடுதலைச் சிறுத்தைகள் தலைவர் திருமாவளவன், இயக்குநர் தங்கர் பச்சான் ஆகியோ ருக்கெல்லாம் நான் நேரில் வேண்டுகோள் விடுத்திருக் கிறேன். நீங்கள் வேண்டு கோள் விடுத்தால் அவர் களும் இன்னும் பலரும் உடனடியாக உதவுவார்கள்.

உங்களிடமிருந்து சாதக மான ஆணையை எதிர் நோக்கும்

அன்புள்ள ஞாநி

**2. அ**ன்புள்ள அமைச்சர் பொன்முடி அவர்களுக்கு

வணக்கம்.

உண்மையில் இந்தக் கடிதத்தை நான் ஒவ்வொரு துணைவேந்தருக்கும் ஒவ்வொரு தன்னாட்சிக் கல்லூரியின் முதல்வர்களுக் கும் எழுத வேண்டும். அவர்கள் எல்லாருக் கும் உத்தரவிடக்கூடிய உயர் கல்வித் துறை யின் அமைச்சராக நீங்கள் இருப்பதால், நீங்களே இந்தப் பிரச்னையை ஒற்றை ஆணையில் தீர்க்கும் வாய்ப்பு இருக் கிறது.

மாணவர்களையும், பெற்றோரையும் கல்வியின் தரத்தையும் பாதிக்கும் இதை என் கவனத்துக்குக் கொண்டு வந்த வாசகர் இளந்திருமாறன், முன்னாள் குடியரசுத் தலைவர் அப்துல் கலாம் கவனத்துக்கும் எடுத்துச் சென்றார். கலாம் எழுதிய பதிலில், மாணவர்கள் இப்படிச் செய்வது தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்வதாகும். தன் செயல் திறனை வளர்க்கா மல் மார்க்கை மட்டும் நம்பி யிருப்பது தவறு என்று குறிப் பிட்டிருக்கிறார்.

பிரச்னை இதுதான். ஒவ் வொரு பொறியியல் பட்டம், பட்டயம், கம்ப்யூட்டர் தொழில்நுட்பம் படிக்கும் மாணவரும் சுமார் மூன்று மாத காலம் ஒரு ப்ராஜெக்ட் செய்ய வேண்டுமென்பது கல்வித்திட்டத்தில் உள்ள விதியாகும். ஒரு குறிப்பிட்ட தலைப்பைத் தேர்ந்தெடுத்து, அதற்குப் பொருத்தமான ஒரு நிறுவனத் துக்குச் சென்று இதைச் செய்ய வேண் டும்.

இதன் நோக்கம் மாணவர் படித்த தியரியை நடைமுறையில் செயல் படுத்திப் பார்ப்பதைக் கற்றுக் கொள் வதாகும். ஆனால் நடைமுறையில் என்ன

ப்ராஜெக்ட், என்ன தலைப்பு, எப்படி ரிப்போர்ட் எழுதுவது என்பது எல்லாம் மோசடியாகவும் பணம் சம்பந்தப்பட்ட தொழிலாகவும் மாறிவிட்டன. கல்லூரிகளும், துறைத்தலைவர்களும் சில போலி நிறுவனங்களும் சேர்ந்து பொய்யான ப்ராஜெக்ட்டுகளைத் தயாரிக்க மாணவருக்கு உதவுகின்றன.

மாணவர்களின் பெற்றோர் இதற்காக 4 ஆயிரம் முதல் 15 ஆயிரம் வரை, சராசரியாக 6 ஆயிரம் ரூபாய் கட்டுகிறார்கள். ப்ராஜெக்ட் செய்து தரும் சென்ட்டர்கள், ரெடிமேட் ரிப்போர்ட்டுகளைத் தயார் செய்து தருகின்றன. மொத்தம் 900 கல்லூரிகள், தலா 400 மாணவர்கள், ஆளுக்கு 6 ஆயிரம் என்று கணக்கிட்டால் வருடத்தில் மொத்தம் சுமார் 216 கோடி ரூபாய்கள் இதில் புழங்குகின்றன. வைவா வொசி எனப்படும் நேர்முகச் சோதனை என்பது பெரிதும் கண்துடைப்பு வேலையாகவே நடக்கிறது.

இப்போது இந்த வருட சீசன் ஆரம்பமாகிவிட்டது. ப்ராஜெக்ட் சென்ட்டர்கள் விளம்பரம் செய்யத் தொடங்கிவிட்டார்கள். 2010 IEEE ப்ராஜெக்ட் 25 டைட்டில், 2009 IEEE 25 டைட்டில், ஜாவா நெட் ப்ராஜெக்ட் 250 டைட்டில் எல்லாமாக மொத்தம் ரூ. 50 ஆயிரத்துக்குத் தயார் என்று எனக்கே ஒரு எஸ்.எம்.எஸ் வந்திருக்கிறது.

நூற்றுக்கு 95 சதவிகித மாணவர்கள் இந்த மோசடியில் ஈடுபட்டாக வேண்டிய கல்விச் சூழலில், படிப்பு முடித்ததும் பெருவாரியானவர்களுக்கு வேலை கிடைப்பதில்லை. விப்ரோ, டி.சி.எஸ், இன்ஃபோசிஸ் போன்ற நிறுவனங்கள் மதிப்பெண்களை மட்டும் பார்ப்பதில்லை. அசல் தகுதியை, ஆற்றலைச் சோதிக்கும்போது போலி ப்ராஜெக்ட் செய்தவர்கள் மதிப்பெண் இருந்தாலும் நிராகரிக்கப்படுகிறார்கள்.

விரைந்து தலையிடாவிட்டால், தமிழகம் ஐ.டி. துறையிலும் பொறியியலிலும் அடுத்த 5 வருடங்களில் பின்னடைவையே சந்திக்கும். தொழிற்சாலைகள் பெருகும். ஆனால் அவற்றில் தமிழ் இளைஞர்கள் வேலை செய்யமாட்டார்கள் என்ற நிலை வரும்.

பெற்றோர்களின் பணத்தைச் சுரண்டி, மாணவர்களின் அறியாமையை ஊக்குவிக்கும் இந்த முறைக்கு முற்றுப்புள்ளி வைக்கும் விதத்தில் நீங்கள் கடும் நடவடிக்கை எடுக்க வேண்டும். எப்படிப்பட்ட நடவடிக்கைகள் எடுக்கலாம் என்பதை பேரா.ஆனந்த கிருஷ்ணன் போன்ற உயர்கல்வி அறிஞர்களிடம் நீங்கள் ஆலோசிக்கலாம். எந்த நடவடிக்கையானாலும் விரைந்து எடுக்க வேண்டும் என்று வேண்டிக்கொள்கிறேன்.

அன்புள்ள ஞாநி

### இந்த வாரப் பூச்செண்டு!

சென்னை பெசன்ட் நகர் வேளாங்கண்ணி தேவாலயத்தில் மொட்டை போட வருவோருக்கு மொட்டை அடிக்கும் பணியில் ஆண்கள் மட்டுமல்ல, பெண்களும் ஈடுபடலாம் என்று காட்டியிருக்கும் அறுபது வயது முருகம்மாள் தலைமையிலான பெண்கள் குழுவுக்கு இ.வா.பூ. இந்தப் பெண்கள் முதியோர் இல்லங்களிலும் முடி மழிக்கும் பணியில் ஈடுபடுகிறார்கள். ஏற்கெனவே திருப்பதி கோயிலில் பெண் நாவிதர்கள் அண்மைக்காலமாகப் பணிபுரிந்து வருவது நினைவுகூரத்தக்கது.

### இந்த வாரத் திட்டு!

தெரு நாய்களுக்கு வெறி தடுப்பூசியும் கருத்தடை ஊசியும் போடாமல், மொத்தமாக அவற்றைக் கொன்று அள்ளிச்சென்ற மௌலிவாக்கம் பஞ்சாயத்துக்கு இ.வா.தி.



* கபில், சச்சின், அசார்

ஐ.பி.எல். முதலிய மின்மினிப் பூச்சிகளுக்கிடையே புராதன ரஞ்சி போட்டிக்கு இப்போது ஒரு தனி மரியாதை ஏற்பட்டிருப்பது உண்மையிலேயே ஆச்சரியப்படுத்துகிறது. ஒரே காரணம், கடந்த சில வருடங்களில் ரஞ்சி போட்டியில் அதிக ரன்கள், அதிக விக்கெட்டுகள் எடுத்த வீரர்கள் உடனடியாக இந்திய அணிக்குத் தேர்வு செய்யப்பட்டிருக்கிறார்கள். (பேட்டிங்கில் புஜாராவும் விஜய்யும் பந்துவீச்சில் வினய்குமாரும் அபினவ் மிதுனும்.) முன்னாள் ரன் மிஷின்களான ஷரத், அமோல் முசும்தாருக்கு நேர்ந்த அநியாயங்கள் இனிமேல் நடக்காது என்கிற நம்பிக்கை இப்போது துளிர்த்திருக்கிறது.

இந்தியாவில் ஆடப்படும் முக்கியமான ஒரு போட்டிக்கு இளவரசர் ரஞ்சித்சிங்ஜியின் பெயர் சூட்டப்பட்டாலும் தன் வாழ்நாளில் ஒருநாள்கூட அவர் இந்தியாவுக்காக ஆடியது கிடையாது என்பதும், இந்தியாவில் அவர் ஆடி யாரும் பார்த்ததும் கிடையாது என்பதும் ரஞ்சி போட்டியின் சுவாரசியமான வரலாறு (சாம்பல் நிறத்திலான சில புகைப்படங்கள் வழியாகத்தான் அவர் ஒரு கிரிக்கெட் வீரர் என்று நம்ப முடிகிறது.) இளவரசர் ரஞ்சித் சிங்ஜி, அன்றைய சச்சின் தெண்டுல்கர். கல்லூரிப் படிப்புக்காக இங்கிலாந்து சென்றபோது ஆரம்பத்தில் நிறவெறி காரணமாக அவரை எந்த அணியிலும் சேர்த்துக் கொள்ளவில்லை. ஆனாலும் அவரது திறமையை நீண்டநாள் ஒளித்து வைக்க முடியாமல், 1896ஆம் ஆண்டு, ஆஸ்திரேலியாவுக்கு எதி



* சுரேஷ் ரெய்னா



* பார்த்தீவ்



* பத்ரிநாத்



* புஜாரா



* முரளி விஜய்



* வினய்குமார்

ச.ந.கண்ணன்

ரான டெஸ்ட் போட்டியில் இங்கிலாந்து அணி சார்பாகக் களம் இறக்கப்பட்ட ரஞ்சி, முதல் டெஸ்ட் மேட்சிலேயே சதம் அடித்தார்.

பிறகு இந்தியா திரும்பிய இளவரசர், 1907ல் நவாநகரின் மகாராஜா ஆனபிறகு கிரிக்கெட் மட்டையை எடுத்துப் பரணில் போட்டுவிட்டு மக்கள் சேவையில் இறங்கி விட்டார். ஆனால், அவருக்குப் பிறகுதான் இந்தியாவில் கிரிக்கெட், சூடுபிடிக்க ஆரம்பித்தது.

இந்த வாரம் முதல் '2010 ரஞ்சி போட்டி' தொடங்குகிறது. இப்போது அனைத்து மாநில அணிகளும் இரண்டு பிரிவாகப் பிரிக்கப்பட்டுள்ளன (சூப்பர் லீக், பிளேட்). தவிர ஹைதராபாத், ரயில்வேஸ், சர்வீஸஸ் ஆகிய சிறப்பு அணிகளும் உண்டு. சூப்பர் லீக் அணியின் சிறந்த ஆறு அணிகளும் பிளேட் பிரிவின் முதலிரண்டு அணிகளும் கால் இறுதிக்குத் தகுதி பெறுகின்றன. இதுவரை மும்பை 39 தடவை ரஞ்சி கோப்பையைத் தட்டிச் சென்றுள்ளது. இதுவரை, இருமுறை ரஞ்சி கோப்பையை வென்றுள்ள தமிழகம், 2003,04ல் இரண்டாவது இடத்தைப் பிடித்தது.

சில வருடங்களுக்கு முன்பு கபில்தேவ், ஐ.சி.எல். -ஐ திடுதிப்பென்று உருவாக்கி ரூபாய் 20 லட்சத்துக்கு இளம் வீரர்களைக் கொக்கி போட்டபோது சுதாரித்துக்கொண்டது பி.சி.சி.ஐ. இது ஐ.சி.எல்லுடன் பணத்தோடு மோதிப் பார்த்தது. வீரர்களுக்கான சம்பளமும் பரிசுத் தொகையும் உச்சத்துக்குச் சென்றன. 2005ல் ரஞ்சியை உத்தரப்பிரதேசம் வென்றபோது அளிக்கப்பட்ட பரிசுத் தொகை, ரூ.7 லட்சம் மட்டுமே. ஆனால், இப்போது ரஞ்சியை வெல்கிற அணிக்கு ஜாக்பாட். பரிசுத் தொகை மட்டும் 2 கோடி ரூபாய். நாலு நாள் ரஞ்சி ஆட்டம் ஆடும் வீரர்களின் ஒருநாள் சம்பளம், ரூ.37,000. மேன் ஆஃப் தி மேட்சுக்கு ரூ.25,000 என்று மூச்சு முட்டப்பணம் திணிக்கப்பட்டதில் ஐ.சி.எல். திவாலாகி விட்டது.

ரஞ்சி போட்டியில் தொடர்ந்து சிறப்பாக ஆடினால்தான் வாழ்வு என்கிற கட்டாயமுமில்லை. 1988ல் பம்பாய் அணிக்காக ஆடத் தொடங்கிய சச்சின் தெண்டுல்கர் 7 ரஞ்சி ஆட்டங்கள் மட்டுமே ஆடி (முதல் ஆட்டத்திலேயே செஞ்சுரி) ஒரு செஞ்சுரியும் 6 அரை செஞ்சுரிகளும் அடித்து உடனடியாக இந்திய அணிக்கு பிரமோஷன் செய்யப்பட்டார். பார்தீவ் படேல், சுரேஷ் ரைனா போன்றவர்களும் புஜாரா, பத்ரிநாத் போல மாங்குமாங்கு என்று மட்டையைத் தேய்த்து ஆடாமல் 'ஸ்மார்ட் வொர்க்' வழியாக இந்திய அணியில் நுழைந்தவர்கள். சமீபத்தில் இந்திய டெஸ்ட் அணிக்குள் நுழைந்த ஜெயதேவ் உனாட்கட் இதுவரை ஒரு ரஞ்சி போட்டியிலும் ஆடியது கிடையாது.

* ரஞ்சித் சிங்ஜி



# ரஞ்சி போட்டி பராக்!




# வாரம் ஒரு மந்திரம்

ஏழையாக இருந்த ஒருவர், நிறைய உழைத்து, நிறைய சம்பாதித்து விட்டார். என்னதான் சுய சம்பாத்தியம் என்றாலும், 'கடவுளின் அருள்' என்பதில் அவருக்கு எந்தவிதச் சந்தேகமும் இல்லை. கையில் ஒன்றுமேயில்லாமல் தான் கதறிய நாட்கள் நினைவுக்கு வந்தன. 'எனக்கொரு வழி காட்டமாட்டாயா? ஒருவேளை சோற்றுக்காவது வழி சொல்லமாட்டாயா?' என்று துடித்த காலங்கள், நெஞ்சில் நெருடின. இன்று செல்வம் கொழிக்கிறது; தக்க நேரத்தில் உதவி செய்த கடவுளுக்கு நன்றி சொல்லவேண்டாமா? கூடை கூடையாக அன்னமும் காயும் கனியும் பருப்பும் பிறவும் சேகரித்தார்; குடம் குடமாகப் பாலும் தயிரும் நிறைத்தார்.

மனைவி குழந்தைகளை அழைத்துக்கொண்டு, தம்முடைய பிரத்தியேக இஷ்டதெய்வக் கோயிலுக்கு வந்து சேர்ந்தார். அதுவோ, பத்து பேர் கூடி நின்றால் பகவான் மறைந்து விடுவார் என்பது போன்ற சின்னஞ்சிறிய கோயில். இவர் கொண்டு வந்த கூடைகளையும் குடங்களையும் வைப்பதற்குக்கூட போதிய இடமில்லை. 'இந்த சுவாமிக்கு இதெல்லாம் ரொம்ப நாளைக்கு வரும்' என்று கூறிக்கொண்டே, 'இவர்தாம் நான் கேட்டவுடன் எனக்கு உதவினவர்' என்று குழந்தைகளிடம் பெருமையாக சுவாமியை அறிமுகப்படுத்தினார்.

சுவாமிக்கும் அன்பருக்கும் ஓர் உரையாடல், வேறு யாருக்கும் தெரியாமல் நடந்தது.

சுவாமி: என்ன இவ்வளவு கொண்டு வந்திருக்கிறாய்? எதற்காக?

அன்பர்: இல்லாதபோது கேட்டேன்; இப்போது இருக்கிறது; உங்களுக்கு நன்றி சொல்ல கொண்டுவந்தேன்.

சுவாமி: ஓ, வெளியூர் போய்விட்டு வந்தால், சொந்த பந்தத்துக்கு ஏதாவது வாங்கிக்கொண்டு வருகிற மானுட வழக்கமா இது?



அன்பர்: நான் எங்கேயும் போகவில்லை. இது நன்றிக்கடன்.

சுவாமி: போகட்டும். நன்றி என்று சொல்லி உன் கடனைத் திருப்புகிறாய். ஆனால், எனக்கெதற்கு இத்தனையும்!

அன்பர்: இருக்கட்டும். சில நாட்களாவது உனக்கு நிறைய அபிஷேகமும் நிறைய நைவேத்தியமும் கிடைக்கட்டும். என்னுடைய ஆசை.

சுவாமி: அப்படியானால் ஒன்று செய். இவற்றையெல்லாம் கொண்டுபோய் வாசலிலோ, தெருமுனையிலோ வைத்துவிடு. யார் யாருக்குத் தேவையோ அவர்கள் எடுத்துக்கொள்ளட்டும்.

அன்பர்: நான் உனக்குக் கொண்டுவந்தால், யாருக்கோ கொடுக்கச் சொல்கிறாயே.

சுவாமி: அப்பா, உனக்கொன்று தெரியுமா? எனக்கு நீ கொடுத்தால், அது இங்கேயே தீர்ந்துவிடும் அல்லது வீணாகிவிடும். அவர்களுக்குக் கொடுத்தால், அது கண்டிப்பாக என்னை அடைந்துவிடும்.

அன்பர்: அபிஷேகப் பாலை விநியோகம் செய்யலாமே!

சுவாமி: ஆனால் அதைவிட அந்தப் பாலை அங்கே நிற்கும் குழந்தைகள் குடித்தால், அதுவே அபிஷேகமாகச் சேர்ந்துவிடும்.

சுவாமி பேசியதைத் திருமூலர் பாடினார்:

படமாடக் கோயில் பகவற்கு ஒன்றீயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கு அங்கு ஆகா
நடமாடக் கோயில் நம்பர்க்கு ஒன்று ஈயின்
படமாடக் கோயில் பகவற்கு அது ஆமே

இறைவனுக்காக நாம் அமைக்கிற ஆலயங்கள் அழகானவை; வண்ண வண்ணப் படங்களும் ஓவியங்களும் கலை கட்டுமானங்களும் கொண்டவை; அங்கே கடவுள், சிலையாகவோ ஓவியமாகவோ காட்சி தருகிறார். அது படம். எனவே, கோயில் என்பது படமாடும் கோயில்; அல்லது படங்கள் கொண்ட மாடக் கோயில். கோயில்களில் காட்சி கொடுக்கிற கடவுள், உயிர்களுக்கு உள்ளே உறைகிறார்.

**ஜீவனுக்குள்ளே சிவன் இருப்பதால், ஜீவனுக்குச் செய்தால், அது சிவனுக்கும் ஆகிவிடும்.**

ஆகவே, கைகால்களோடு நடமாடிக்கொண்டிருக்கிற உடல்கள், நடமாடும் கோயில்கள். மாடக் கோயில் கடவுள் படத்துக்கு ஒன்று கொடுத்தால், அது அங்கேயே முடிந்துவிடும். ஆனால், நடமாடுகிற உயிர்களுக்கு, உடன் வாழும் மனிதர்களுக்கு ஒன்று கொடுத்தால், அதன் பயன் பகவானை அடைந்துவிடும். சிவனுக்குச் செய்ய வேண்டும்; ஜீவனுக்குள்ளே சிவன் இருப்பதால், ஜீவனுக்குச் செய்தால், அது சிவனுக்கும் ஆகிவிடும்.

மூலரின் சொல், மந்திரச் சொல். நம்பன் என்றால் சிவன்; நம்பன் வாசம் செய்வதால், மனிதர்களெல்லாம், 'நம்பர்' ஆகிவிட்டனர்.

மகான்களின் மொழியாய் மலர்ந்த மந்திரங்களைத் தொடர்ந்து அனுபவிப்போம்.

## நாகூர் ரூமி

# தேவதையும் பூனைக்குட்டியும்

“**வா**ப்பா..., தின்னுண்டா என்னா வாப்பா?”

தனது காலுறையைக் கழற்றி அந்தப் பெண் வாளியினுள் போட்டாள். வாளியைக் கிணற்றினுள் இறக்கினாள். தண்ணீரோடு அதை மேலே எடுத்தாள். நனைந்திருந்த காலுறையைப் பிழிந்து கிணற்றடியில் ஏக்கத்தோடு அவளை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்த நாய்க்குட்டியின் வாயில் ஊற்றினாள்.

பால்குடிக்கும் குழந்தையைப் போல ஆர்வத்தோடு தண்ணீரைக் குடித்தது நாய்க்குட்டி. அது போதும் போதும் என்று சொ லும்வரை - தலையை ஆட்டி பிழிந்து பிழிந்து ஊற்றினாள்.

தாகம் தீர்ந்தவுடன் நனைந் தலையுடன் அவளை ஏறிட்டு பார்த்தது. அந்தச் சின்ன உயிரி தாகம் தீர்த்ததன் பொருட்டு விப சாரியாக இருந்தபோது அவள் பாவங்களை





யெல்லாம் மன்னித்து இறைவன் அவளுக்குச் சொர்க்கம் அருளி னான்!

'எனக்குப் பிடித்த நபிமொழிகள்' என்ற தலைப்பில் எழுதச் சொல்லி யிருந்தார்கள் 'ஹதீத்' என்ற மாத இதழில். நூறு ரூபாய் தருவார்கள். ஆனால் அதைவிடப் பத்து மடங்கு எனக்குத் தேவை இருந்தது. இருந் தாலும் ஒப்புக்கொண் டேன்.

ஒரு சின்னச் சாளரத்தைத் திறக் கும் இறைவன் அதைத் தொடர்ந்து பல கருவூலக் கதவுகளையும் திறக்கலாம். வருவது எவ்வளவு சிறிய தூசியாக இருந்தாலும் அதை நான் உதறுவதில்லை.



அதோடு, இப்படி ஒரு கட்டுரை எழுதுவதில் எனக்கு ஒரு சந்தோஷமிருந்தது. அதற்காகத்தான் விபச்சாரியை இறைவன் மன்னித்த நபிமொழியில் ஆரம்பித்தேன். அதைத் தொடர முடியாமல் குறுக்கே வந்து நின்றது ஜின்!

கேள்வி கேட்டவள் என் சுட்டி தேவதை. கடைக்குட்டி. அவளுடைய கேள்விகளும் சாதார ணமாக இருக்காது. ஆனால் சாதாரணமாகத் தோன்றும். எமிலி டிக்கின்ஸன் கவிதைகள் மாதிரி ஏமாற்றுகின்ற எளிமை இருக்கும்.

அப்படித்தான் அன்று ஒரு கேள்வி கேட்டாள். அதுவும் ரொம்பத் தீவிரமாகக் கதை எழுதிக் கொண்டிருக்கும்போது....

''வாப்பா, அல்லாஹ் பையனா பொண்ணா?''

அந்தக் கேள்வி கொடுத்த அதிர்ச்சியில் என் கற்பனைக் குதிரை கல்லாகி, மண்ணாகிப் பின் மாயமானது.

இந்த மாதிரிக் கேள்விகள் உன் மண்டைக் குள்ளிருந்து மட்டும் எப்படிக் கிளம்புகின்றன மகளே?! இதற்கெல்லாம் ஒரு வகையில் அவள் பாட்டியார்தான் காரணம்.

குரானையும் ஹதீதையும் அரபியிலும் தமிழி லும் அர்த்தம் பார்த்து, பாட்டுப் பாடுவது மாதிரி ராகத்தோடு, பல்லவியோடு தாளம் அனுமதி இல் லாததால்- ஓதிக்கொண்டே இருப்பார்கள். தேவ தையும் கூட சேர்ந்தே சொல்லுவாள்.

திடீரென்று என்னிடம் வந்து, ''வாப்பா, மூணாங் கலிமா சொல்லு'' என்று வம்பில் மாட்டி விடுவாள். நான் அசடு வழிந்து முடிப்பதற்குள் ''மூணாங் கலிமா தம்ஜீது, சுப்ஹானல்லாஹி...'' என்று ஆரம்பித்துவிடுவாள்.

என் மாமியார்மீது கோபமாக வரும். பழிக்குப் பழி நிச்சயம் வாங்கிவிடுவது என்று சங்கல்பம் செய்து கொள்வதைத் தவிர வேறு ஒன்றும் செய்ய முடியாது. ஆனால் ஓர் ஐந்து வயதுக் குழந்தையின்

ஒப்பித்தலின் அருவியில் நனைவது ரொம்ப சந்தோஷமாகத்தான் இருக்கும். ஆனால் இந்தக் கேள்வி?

எனக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. ரொம்ப ஆச்சரியமாக இருந்தது. குழந்தையாக இருப்பதுதான் எவ்வளவு அற்புதமான விஷயம்! ஆனால் அது நாம் குழந்தையாக இல்லாமல் இருக்கும்போதுதான் தெரிகிறது!



ஆண்டவனே! உருவமற்ற இறைவனுக்கு உண்மையாளனாக இருக்க முடியாத சூழ்நிலை வந்துவிட்டது போலுள்ளதே! என்ன பதில் சொன்னாலும் நான் குற்றவாளி! விபச்சாரியைக் கல்லால் அடித்துக் கொல்வதா இல்லையா என்று நீதி வழங்கச் சொல்லி ஈசாவுக்கு- நம்ம இயேசுகிறிஸ்துதான்- 'டெஸ்ட்' வைத்த யூதர்களைப் போல என் பதிலுக்காகக் காத்திருந்தாள் தேவதை! ஆணென்றும் சொல்ல முடியாமல் பெண்ணென்றும் சொல்ல முடியாமல் அமர்ந்திருந்தேன் நான்.

மிகத் தீவிரமான யோசனைக்குப் பின் அந்த முடிவுக்கு வந்தேன். ஆயிரம் பொய் சொல்லியாவது உன் அறியாமையை மறைத்துக்கொள் என்ற முதுமொழிக்கேற்ப, ஒரு பொய்யைச் சொல்லி என் மகளைக் குஷிப்படுத்திவிட வேண்டியதுதான்.

''அல்லாஹ் ஒன்னெ மாதிரி பொண்ணுதாங் குட்டி'' என்றேன்.

''அப்ப ஏன் அவன், அவன்னு சொல்றீங்க?''

இடைவெளியே இல்லாமல் அடுத்த கேள்வி! இடுக்கிப்பிடி! இறைவனின் சோதனை என்பது இதுதானோ?

'தப்பா சொல்லிட்டேம்மா' என்று அவள் நாடி பிடித்துக் கெஞ்சுவதைத் தவிர எனக்கு வேறு வழி தெரியவில்லை.

'தப்புத் தப்பா சொல்லுங்க' என்று காறித் துப்பிவிட்டு அவள் போனாளோ நான் பிழைத்தேன். இறைவனிடமிருந்து அன்று தப்பித்த நான் இன்று ஜின்னிடம் மாட்டிக் கொண்டேன்.

## 'காட்டு வாப்பா பூனெக்குட்டிய' என்று கத்

ஜின்களும் இறைவனுடைய படைப்புகள்தான். நெருப்பாலோ ஒளியாலோ படைக்கப்பட்டவர்கள். எந்த ரூபத்திலும் வருவார்கள். அதில் நல்லவர்களும் கெட்டவர்களும் உண்டு. அவர்களை வசியம்கூட செய்து, நம்மால் முடியாத வேலைகளுக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம். இப்படியெல்லாம் 'ஜவாஹிருல் ஹம்ஸா' என்ற புத்தகத்தில் போட்டிருக்கிறது என்றா என் மகளிடம் சொல்ல முடியும்?!

'தெரியலையே கண்ணு' என்று வழிந்தேன். ஒரு முறைப்பை முகிழ்த்துவிட்டுத் திரும்பிச் சென்றாள். அவள் போட்டிருந்த கவுனின் இடுப்புப் பக்கங்களிலிருந்த நாடாக்கள் கட்டப்படாமல் எப்போதும் போல அவிழ்ந்து கிடந்தன.

'ங்கெ வா குட்டி' என்று கூப்பிட்டு அதைப் படுக்கை வாட்டு எட்டு வடிவத்தில் கட்டிவிட்டு அனுப்பினேன்.

நபிமொழிகளைத் தொடரலாம் என்று திரும்பியபோதுதான் அந்தச் சப்தம் கேட்டது.

நான் எழுதிக்கொண்டிருந்த மேஜைக்கு அடியிலிருந்து

வந்தது சப்தம். சப்தமல்ல, ஒருவிதமான கேவல். அந்த இரவின் அமைதியைக் கிண்டல் செய்வதுபோல் இருந்தது. அதில் ஒருவிதமான சோகம் இருந்தாலும் கொஞ்சம் பயமாக இருந்தது. குனிந்து பார்த்தேன்.

ஒரு கறுப்புப் பூனைக்குட்டி. தலைப்பகுதியில் மட்டும் நடுவில் வகிடு எடுத்த மாதிரி வெள்ளை நிறம். இந்திரா காந்தியின் தலை ஸ்டைல் மாதிரி.

பயங்கரமான அழகாக இருந்தது. அதன் கண்களில் வேறு ஓர் உலகத்திலிருந்து கொண்டுவரப்பட்ட ஒரு வசீகரமிருந்தது.

எதையோ விழுங்கிவிட்டிருந்தது. முள்ளாக இருக்கலாம். நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை.

அதை வெளியே எடுக்கத்தான் பிரயத்தனப்பட்டுக் கொண்டிருந்தது. 'அஹ் அஹ்' என்று கக்குவதுபோல செய்தது. தலைக்கு மட்டும் காக்கா வலிப்பு வந்தமாதிரி வெட்டிக்கொண்டது. அதோடு அந்தக் கேவல்.

எப்படி வந்தது?

விடை தேடும் நேரமல்ல அது. ஏதாவது செய்ய வேண்டும். பெரிய பூனையுமல்ல. பிராண்டிவிடும் என்ற பயம்

**ாண்டே எனக்கு முன்னால் ஓடி வந்தாள்.**

இல்லை. மெல்ல அணுகி அதன் தலையைத் தடவிக் கொடுத்தேன். கேவல் நின்று அமைதியாகி என்னை ஒரு கணம் பார்த்தது.

தலையை மெதுவாகப் பிடித்து வாய்க்குள் பார்த்தேன். வாய் லேசாகத் திறந்துதான் இருந்தது. உள்ளே கொஞ்ச தூரத்தில் குறுக்காக ஏதோ... நான் நினைத்தது சரிதான்.

மெதுவாக என் ஆள் காட்டி விரலையும் பெருவிரலையும் வாய்க்குள் விட்டு அந்த முள்ளை - எதுவோ - வெளியே எடுத்தேன். க்ளோரோஃபாம் கொடுக்கப்பட்ட நோயாளியைப் போல எனக்கு ஒத்துழைப்புக் கொடுத்தது.

மஞ்சள் நிறத்தில் ஓர் ஆணி.

நார்மலானதும் நாக்கால் வாயை நக்கிக்கொண்டே இந்தப் பூனையும் பாலைக் குடிக்குமா என்பதுபோல என்னைப் பார்த்தது. நகைப்பதைப் போலிருந்தது.

இந்த அழகான பூனைக்குட்டியை என் கடைக்குட்டியிடம் காட்டினால் பூரித்துவிடுவாள்.

அந்த மஞ்சள் ஆணியை எடுத்து மேஜை மேல் வைத்துவிட்டு குட்டியைக் கூப்பிடப் போனேன்.

'காட்டு வாப்பா பூனெக் குட்டியெ' என்று கத்திக் கொண்டே எனக்கு முன்னால் ஓடி வந்தாள்.

அறையில் பூனைக் குட்டி இல்லை.

அதன் தோற்றத்தைப் போலவே மறைவும் மர்மமானதாகவே இருந்தது. மேஜையைப் பார்த்தவுடன் என் சந்தேகம் வலுப்பட்டது.

ஆணியை எடுத்துப் பார்த்



தேன். தகதகவென மின்னியது சுத்தமான தங்கம்!

பூனைக்குட்டி என்னைப் பார்த்துச் சிரித்ததன் காரணம் புரிந்துவிட்டது.

'அய், அலஹாக்கிது, யாரு வாப்பா குடுத்தா?' என்றாள் தேவதை.

இப்போதும் பதில் சொல்ல முடியாது. ஆனால் சந்தேகம் வந்தபோதே பூனைக்குட்டியைப் பார்த்து 'அஸ்ஸலாமு அலைக்கும்' என்று சொல்லியிருக்கலாம்.

'மிஸ்' பண்ணிவிட்டேன். ●

# பிரபுதேவாவுக்கு மட்டும் எதிர்ப்பு ஏன்?

● தமிழ்வளவன், பெங்களூரு

? 'ஆயுதபூஜை, விஜயதசமியை முன்னிட்டு' என்று சன் டி.வி. பகிரங்கமாகச் சொல்கிறது. 'விடுமுறை தினத்தை முன்னிட்டு' என்று கலைஞர் டி.வி. சொல்கிறது. எந்த விடுமுறை, எதற்கு விடுமுறை என்று சொல்லத் தயங்குவதேன்?

! விடுமுறைக்கான காரணத்தைச் சொன்னால், கடவுள்களையும் ஆத்திகத்தையும் ஏற்பதுபோல் ஆகிவிடும். அதேசமயம் 'விடுமுறை'யினால் வரக்கூடிய லாபம், வணிகம் பறிபோய்விடக் கூடாது. கொள்கையா? வணிகமா? வழக்கம் போல் வணிகம் முந்திக்கொண்டது.

● பா. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? ''மக்களுக்குச் சிறப்பான வகையில் சேவை செய்ய, ஒவ்வொரு எம்.எல்.ஏ.வுக்கும் பிரத்யேகமான மின் அஞ்சல் முகவரி ஏற்படுத்தித் தரப்படும்'' என்று முதல்வர் அறிவித்தது பற்றி?

! ஏற்படுத்தித் தருவதென்ன? அவரவரும் தாமாகவே ஏற்படுத்திக் கொள்ள முடியாதா? இதுநாள் வரை என்ன செய்து கொண்டிருந்தார்கள்?

● கண் சிவகுமார், திருமருகல்

? அனுஷ்கா, ஐஸ்வர்யா ராய், தமன்னா - யாருடைய நடிப்பில் முதிர்ச்சி தெரிகிறது?

! ஐஸ்வர்யாவின் முகத்திலும் நடிப்பிலும் முதிர்ச்சி தெரிகிறது. தமன்னாவும் அனுஷ்காவும் நடிக்கிறார்களா என்ன?



* பழங்கதை!

● ஆர். அஜிதா, கம்பம்

? நீதிபதியாகப் பணியாற்ற வேண்டுமானால் கம்ப்யூட்டர் குறித்த அடிப்படை அறிவு அவசியம் என்று சுப்ரீம் கோர்ட் உத்தரவிட்டுள்ளது பற்றி?

! இதற்கெல்லாம் உத்தரவிட வேண்டிய நிலைமை என்பது துர்பாக்கியமானது!

● பி. தர்சினி, குடந்தை

? ''குழந்தை திருடும் சம்பவம் போன்ற சமூக விரோதச் செயல்களுக்கு, பர்தா துணை புரிகிறது; எனவே சட்டப்படி அதற்குத் தடை விதிக்க வேண்டும்,'' என்கிறாரே பால் தாக்கரே?

! பர்தா அணியாதவர்களும் குழந்தைத் திருட்டிலும் வேறு பல குற்றங்களிலும் ஈடுபடத்தான் செய்கிறார்கள். பர்தா அணிய வேண்டியதில்லை என்ற மனமாற்றம் அந்த மதத்தவரிடையே படிப்படியாகவும் இயல்பாகவும் ஏற்பட வேண்டும். பிறர் வற்புறுத்தினால் மனம் இறுகுமே தவிர, மாற்றம் உருவாகாது.



* திறக்குமா கண்?

● கே. கணபதி, சென்னை-11

? வளர்ந்த நாடுகளின் பொருளாதாரக் கொள்கைகளைக் கண்ணை மூடிக்கொண்டு பின்பற்றக் கூடாது என்று இந்திய பிரதமர் கூறியுள்ளது பற்றி?

! இனியாவது பிரதமர் கண் திறந்து

**நீங்கள் கேட்டவை**

ர்த்து, இதுவரை கண்ணை டிக்கொண்டு பின்பற்றி நிருப்பதை உணர்ந்து நத்திக்கொண்டால் சரி.

ப.டபிள்யூ.ரபி அஹமத், சிதம்பரம் ❑

ஒதற்கு முன் பல நடிகர் - கைகள் இரண்டாவது திரு







* நல்ல ...

ணம் செய்து கொண்டிருக் ரார்கள். அப்படி இருக்க, பு தேவாவுக்கு மட்டும் ன் எதிர்ப்பு?

இரு தார தடைச்சட்டம் மலுக்கு வந்த பிறகும் இது ான்ற சந்தர்ப்பங்களில் னவனுக்குப் பயந்தோ, டியா பப்ளிஸிட்டிக்கு அஞ்சியோ, பாதிக் பட்ட பெண்கள் ஆட்சேபிக்காமல் ருந்து வந்தார்கள். கணவர் பேரில் உள்ள ரன்பினால் இந்தத் தியாகத்துக்குத் தயாரா ாக நினைத்துக் கொண்ட பெண்களும் ண்டு! இப்போது அதெல்லாம் பழங் தையாகி, பெண்கள் தங்கள் உரிமைகளை நிலைநாட்டிக் கொள் ளும் துணிவு பிறந் திருக்கிறது.

● ப.தமிழானி, சேலம்

? தங்கள் கனவுகளில் அதிகம் வருவோர் யார்?

! கல்கி வாசகர்கள்! கனவிலும் நினைவிலும் அவர்களேதான்!

● எ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்

? சென்னை ஒரு சர்வ தேச நகரமாக வளர்ந்து வருகிறது என ஸ்டா லின் பெருமிதம் அடைந்திருக்கிறாரே?

! சுகாதாரத்தைப் பொறுத்தமட்டில் சர்வ தேசத்திலும் முதன்மை யான நரகமாக வளர்ந்து வருகிறதே; அதற்கும் சேர்த்துப் பெருமைப்பட லாம்!

● கே.வேலுச்சாமி, தாராபுரம் ★

? திண்டுக்கல் மாவட்டம் தொப்பம்பட்டி ஒன்றிய, பொருளூர் கிராமத்தின் ஒரு பிரிவு மக்கள், மதுரை பொதுக்கூட்டத் தில் கலந்துகொண்ட காரணத்துக்காக, அவர் களுக்கு வழங்கப்பட்ட

* ... தேடி?

டி.வி. மற்றும் காஸ் சிலிண்டர்களை ஆளுங்கட்சியினர் பறித்துச் சென்றுள்ள னரே?

! இது உண்மையெனில் ஒரு விஷயம் தெளிவாகிறது. இதுவரை "கட்சியும் ஆட் சியும் ஒன்றெனக் கருதக்கூடாது" என்றுதான் ஆட்சேபித்து வந்தோம். இப்போது ஆட்சி

யைக் காட்டிலும் கட்சி மேலா னது என்ற நிலை தோன்றியிருக் கிறது! இல்வசமாகத் தரப்பட் டதைத் திரும்பப் பெறும் உரிமை ஆட்சிக்குக்கூட கிடையாது. ஆனால், கட்சி அதைச் செய் கிறது!

● எம். மிக்கேல்ராஜ், சாத்தூர்

? பொங்கி வரும் அருவி, அமைதியான நதி தராசுவின் பார் வையில் எது அழகு?

! அருவி- உல்லாசமான காதலி; நதி - அக்காதலி நல்ல மனைவியா கும்போது எடுக்கும் மகத்தான மறு அவதாரம். இரண்டுமே இணையில்லா அழகுதான்.

● என். சண்முகம், திருவண்ணாமலை

? "தனியார் பள்ளிகளில் குதிரைகளை குதிரை களாக்குகிறார்கள். இது சாதனையல்ல. அரசு பள்ளிகளில் கழுதை களை குதிரைகளாக மாற்றிக் காட் டுகிறார்கள். இதுதான் சாதனை..." என்கிறாரே அமைச்சர் பொங்கலூர் பழனிச்சாமி?

! அரசுப் பள்ளிகளின் சாதனைகள் போற்றப்பட வேண்டியவைதான். ஆனால், அமைச்சர் பயன்படுத்தி யுள்ள உருவகம், அரசுப் பள்ளி களில் சேரக்கூடிய எளிய மாண வர்களைக் கொடூரமாக அவமானப்படுத்து வதாக இருக்கிறது. அக்குழந் தைகளின் பூ மனம் கருதியா வது அமைச்சர் யோசித்துப் பேசி யிருக்க வேண்டாமா?



* வெற்றி உதாரணம்...

* ...பெருகும் எதிர்பார்ப்பு





* குரூர உருவகம்!

● மு. மதிவாணன், அரூர்

? ஏ.ஆர்.ரஹ்மான் புராணப் படத் துக்கு இசை அமைத்தால் எப்படி இருக்கும்...?

! 'ஒரு எல்லிஸ் ஆர்.டங்கன் பக்த மீரா படத்தை டைரக்ட் செய்து அமோக வெற்றி பெற்றிருக்கும் போது, ஏ.ஆர்.ரஹ்மான் ஏன் ஒரு புராணப் படத்துக்கு இசை அமைக்கக்கூடாது; பிரமாத வெற்றி அடையக் கூடாது?' என் கிற எதிர்பார்ப்பு நிறைய இருக் கும்.

☐ ரூ.150/ பரிசு பெறுபவர்:
எ.டபிள்யூ ரபீ அஹமத், சிதம்பரம்

* ரூ. 75/ பரிசு பெறுபவர்:
கே.வேலுச்சாமி, தாராபுரம்

● ஆர். ராஜகுமரன், காராப்பாடி

? "மனைவி - குழந் தைகளை கணவன் அடிக்கலாம். ஆனால் காயம் ஏற்படக் கூடாது," என்று ஒருங்கிணைந்த அரபு நாடுகளின் சுப்ரீம் கோர்ட் கூறியுள்ளது பற்றி?

! இஸ்லாமியர் சட்டங்கள் பல மிகக் கடுமையானவை. அவற் றைக் காலத்துக்கு ஏற்ப மாற் றம் செய்ய வேண்டியதன் அவசியத்தை உணர்ந்து, இஸ் லாமிய நாடுகளின் ஆட்சியா ளர்களும் மதத் தலைவர்களும் இணைந்து செயல்படுவது நல்லது.

உங்கள் கேள்விகளை 'தராசு' என்று குறிப்பிட்டு kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம். உங்கள் செல்போனில், KAGQA என்று டைப் செய்து ஒரு ஸ்பேஸ் விட்டு, உங்கள் கேள்வி,பெயர், ஊர் ஆகியவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கும் எஸ்.எம்.எஸ். செய்யலாம்.

என்றும் உங்களுடன்

# ங்கையர் மலர்

VBC Jewellery
HOUSE OF VUMMIDI

இணைந்து வழங்கும்



# 'வைர மங்கை'

-சிறப்பு சந்தா திட்டம்!*



கல்கி நிறுவனத்தின் மற்றொரு வெளி டான, தரத்திலும் நம்பர் ஒன் மகளிர் ந இதழ் மங்கையர் மலர் நவம்பர் தழில், 'வைர மங்கை' - சிறப்பு சந்தா ட்டம் (பக்கம் 187) பற்றிய அறிவிப்பு வளியாகியுள்ளது. இத்திட்டத்தின்படி ந்த ஒரு நபரும் மங்கையர் மலருக்கு தா கட்டி, ஐந்து முத்து மங்கைகளை றிமுகப்படுத்தலாம். அப்படி அறிமுகப் டுத்துபவர் பவள மங்கை என்ற பட்டம் றுவார். பவள மங்கைக்கும் (ரூ.250/- திப்புள்ள) முத்து மங்கைகளுக்கும் ரூ.100/- மதிப்புள்ள) பரிசுக் கூப்பன்கள் ந்த மாத இறுதிக்குள் அனுப்பி வைக்கப் டும்.

ஒவ்வொரு மாதமும் குறைந்தபட்சம் ப்பது முத்து மங்கைகளை அறிமுகப் டுத்துவதன் மூலம், பவள மங்கையி ருந்து பதவி உயர்வு பெற்று மரகத ங்கை என்ற மகுடம் சூட்டப்படும்.

இவ்வாறு முப்பது சந்தாதாரர்களை றிமுகப்படுத்தும் முதல் இருபது திர்ஷ்டசாலிகளின் புகைப்படம் அடுத்து வரும் மங்கையர் மலர் இதழில் வெளியாகும். கூடவே 'வைர மங்கை' பம்பர் பரிசுக் குலுக்கலில் கலந்து கொள்ள வும் அவர்கள் தகுதி பெறுவார்கள்.

'கல்கி' நிறுவனத்தின் மற்றொரு வெளி யீடான நமது மங்கையர் மலர் இதழின் அன்புவட்டம் விரிவடைய வேண்டும் என்ற நோக்கத்துடன் கொண்டு வரப்பட்ட இத்திட்டத்துக்கு, வாசகியரின் ஏகோபித்த வரவேற்பைக் கண்டு மகிழ்ச்சி அடைகி றோம். கல்கி வாசகர்களையும் இத்திட்டத் தில் கலந்து கொள்ள அன்புடன் அழைக்கி றோம்.

நீங்களும் வைர மங்கை ஆகணுமா? அதற்கான கூப்பன் அடுத்த பக்கத்தில்...

(ஆர்)

மேலும் விவரங்களுக்கு
77080 60341 / 99400 73736




அன்புள்ள ஆசிரியர் அவர்களுக்கு,

குக்கிராமத்தில் பிறந்து வளர்ந்து, திருமணம் டிந்ததும் நகரத்துக்கு வந்தேன். அப்போதுதான் எனக்கு ற்ற தோழியாக மங்கையர் மலர் அறிமுகமானாள். நூலகத்துக்குச் சன்றால் சமையல், கைவேலை, சட்டம் என்று ஒவ்வொரு பிரிவுக்கும் தனித்தனி த்தகம் தேடவேண்டும். இவற்றையெல்லாம் ஒன்றாக்கி தரும் மங்கையர் மலரைப் ார்த்தப்பிறகு வருங்காலத்தில் நானே நூலகம் வைக்க ஆசைப்படுகிறேன்.

இத்தகைய பெருமைமிகு மலரை எனது சகோதரிகளுக்கும் எடுத்துச் செல்ல ளைத்தேன்...முடிப்பேன்... ஜெயிப்பேன்.

- எஸ்.ராஜேஸ்வரி, செங்கல்பட்டு



## மங்கையர் மலர் - VBC இணைந்து வழங்கும் 'வைர மங்கை' சிறப்பு சந்தா திட்டம்

அன்பு அனுஷா நடராஜனுக்கு, பவள மங்கையான நான் (தற்போதைய மங்கையர் மலர் வாசகி), மங்கையர் மலரை, 5 முத்து மங்கைகளுக்கு அறிமுகப்படுத்துகிறேன். தாங்கள் கொடுத்துள்ள இந்த படிவத்தை முழுமையாகப் பூர்த்தி செய்து, 5 ஓராண்டு சந்தாதாரர்களின் தொகையாக, ரூ.1250/- மங்கையர் மலர் என்ற பெயரில் டி.டி/M.O மூலம் இணைத்துள்ளேன். என்னுடைய 5 முத்து மங்கை தோழிகளுக்கும், மங்கையர் மலர் இதழை அடுத்த மாதத்திலிருந்து அனுப்பி வைக்கவும். எனக்கும் என் தோழிகளுக்குமான பரிசுக் கூப்பன்களையும் அனுப்பி வைக்கவும். மேலும் பல முத்து மங்கைகளை அறிமுகப்படுத்த என்னால் இயன்றவரை முயலுகிறேன்.

### பவள மங்கை

எனது பெயர் :........................................

முகவரி:........................................

........................................

........................................

சந்தா எண்: (தாங்கள் சந்தாதாரராக இருந்தால்)

........................................

ஃபோன்: ........................................

ஈமெயில்........................................

3. பெயர் : ........................................

முகவரி : ........................................

........................................

........................................

ஃபோன்:........................................

ஈமெயில்........................................

### நான் அறிமுகப்படுத்தும் முத்து மங்கைகள்:

கல்கி

1. பெயர் : ........................................

முகவரி : ........................................

........................................

........................................

ஃபோன்:........................................

ஈமெயில்........................................

4. பெயர் : ........................................

முகவரி : ........................................

........................................

........................................

ஃபோன்:........................................

ஈமெயில்........................................

2. பெயர் : ........................................

முகவரி : ........................................

........................................

........................................

ஃபோன்:........................................

ஈமெயில்........................................

5. பெயர் : ........................................

முகவரி : ........................................

........................................

........................................

ஃபோன்:........................................

ஈமெயில்........................................

உறையின் மீது 'வைர மங்கை' என்று குறிப்பிட்டு அனுப்பவும்

இப்படிக்கு

**அனுப்ப வேண்டிய முகவரி**

*மங்கையர் மலர் சந்தா பிரிவு, மங்கையர் மலர்,*
*கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,*
*ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032*

தேதி:........................................



# திரும்பத் திரும்பத் தவறு!

**வா**ஷிங்டன், டோக்யோ, மெல்போர்ன் மற்றும் ன்னபிற பெரு நகரங்களுக்கு, ந்தெந்த விமான நிறுவனங்ள் ஒரு நாளைக்கு எத்தனை றை விமானங்களை இயக்குன்றன என்பது அத்துப்படி ன நம்மில் பலருக்கு, நமது ாந்த கிராமத்துக்கு எத்தனை றை நகரப் பேருந்துகள் இயக்ப்படுகின்றன என்பது தெரிாது பெரும் சோகம்.

பிரமிடுகள் பற்றி வியந்து ாகிக்கிற அளவுக்கு, 'ஆதிச்சல்லூர்', 'மணல்மேடு' மற்றும் ரைமேடு' போன்ற நமது மண்ில் கிடைக்கிற முதுமக்கள் ழிகள் குறித்தோ, மேற்சொன்ன வ்வோர் இடத்திலும் நூற்றிம்பது ஏக்கரை ஒட்டிய நிலப்பரப்பில் மைந்துள்ள சுடுகாடுகளின் முக்கியத்துவம் றித்தோ கவனம் இருப்பதில்லை.

பூமியில் புதையுண்ட நகரங்களான மொஹஞ்சதாரோ' மற்றும் 'ஹரப்பா' பற்றி க்கிருக்கிற அக்கறை, நமது தமிழ் மண்ின் மையப் பகுதியில் கங்கை கொண்ட ாழபுரத்துக்கு மிக அருகே உள்ள 'உட்ாட்டை' குறித்து இருப்பதில்லை.

ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட நகர ாகரிகம் என்று கொண்டாடப்படுகிற 'மெசோடாமியா நாகரிகம்' குறித்து நமக்கு இருக்கிற ிச்சயம், பூம்புகார் குறித்து இல்லை. பதினாராயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய, நுட்மானக் கட்டுமானங்களைக் கொண்ட புகார் கரம் கடலுக்குள் மூழ்கியுள்ளது என்ற தனது ய்வின் முடிவை 'கிரஹாம் கூக்' என்கிற றிஞர் சான்றுகளோடு வெளியிட்ட பின்னும், 'அது தவறு', 'அதில் பிழை இருக்கிறது' ன்கிற அளவில் எதிர்மறை அசைவினைக் கூடக் காட்டாமல், அபிப்பிராயம் சொல்லாமல் மௌனித்து இருப்பதன் மூலம் இந்தச் சமூகம் தமிழ் மண்ணின் கலாசாரம், பண்பாடு மற்றும் நாகரிகத் தொன்மையை இருட்டடிப்புச் செய்துகொண்டிருக்கிறது.

நாம், நமது அடையாளம், தொன்மை குறித்து கவனிக்காத தவற்றைத் திரும்பத் திரும்பச் செய்கிறோம்.



கே.பி.அரவிந்தன் தனது 'இருப்பும் விருப்பும்' நூலில் 'தாங்கள் தங்களது தவறுகளைத் திரும்பத் திரும்பச் செய்ததே தாங்கள் தோற்றதற்கான பிரதான காரணங்களுள் மிக முக்கியமானது' என்கிறார்.

'காமன்வெல்த்'தில் தங்கம் வென்ற சாய்னா சொல்கிறார் "I won the gold because I did not repeat my mistakes."

இரா.எட்வின்

**வாசகர்களே...**

**உங்களைப் பாதித்த விஷயங்களை 'வாசகர் தலையங்ம்' பகுதியில், பாராட்டலாம்; குட்டலாம்; திட்டலாம்; டனே எழுதுங்க!**

காலை எழுந்தவுடன் சிரிப்பு!

அறுசுவை கொண்ட முழு விருந்து வாழ்வாக அமையும்போது அமானுஷ்யம் என்ற சிறு கசப்பு தவிர்க்க முடியாததுதான். அது பயத்தை மட்டும் தரவில்லை. பயமே ஞானத்தின் ஆரம்பம் என்று பைபிளில் சொல்லப்பட்டுள்ள தற்குக் காரணம் ஞானம் என்பது கடவுளை அறிவதுதான் என்பதை கோனார் உரையோடு விளக்க வேண்டியது இல்லை.

சின்ன வயசுலேர்ந்து நிறைய பேய் கதைகளும் அமானுஷ்ய அனுபவங்கள் பற்றியும் கேள்விப்பட்டு இருக்கேன். அதனால இருட்டுச்சுனா பேய்கள் உலாவத் தொடங்கிவிடும் என்று நம்பத் தொடங்கிட்டேன். வீட்டில் படுக்கும்போது ரெண்டு பாட்டி, ரெண்டு அக்கா, ரெண்டு தம்பின்னு பேக்கரியில ரொட்டிய அடுக்கி வெச்ச மாதிரி வரிசையாத்தான் தூங்குவோம்.

அப்போ வீட்டு ஜன்னல் கதவை மூட பெரும் யுத்தமே நடக்கும் - ஜன்னலுக்கு வெளியே இருட்டுல பேய் இருக்கும்னு.

அப்போ நம்புனீங்க சரி... இப்போ கூடவா இந்த மாதிரி பேய் பிசாசை நம்புறீங்கன்னு



# ஆயிரம் ஆர்த்

கேட்கலாம். காந்தத்தில வடக்கு, தெற்குப் புலங்கள் இருக்கும். அதை எத்தனை துண்டு களா ஒடைச்சாலும், எல்லாத் துண்டுகளிலும் வடக்குத் தெற்கு வந்து குந்திக் கொள்வதைப் போலத்தான் இந்த நம்பிக்கையும்.

பாஸிட்டிவ் சக்தியாக கடவுள் என்று இருக்கும்போது, நெகட்டிவ் சக்தியாக சாத்தானும் இருக்கத்தானே செய்யும். அதுதானே சைன்டிஃபிக் ரூல்ஸ். இயற்கை. ஆனா அதை வேற மாதிரியும் சொல்லலாம்.




10% - 45% Govt. Rebate
ThiccoSilks
THIRUBUVANAM SILK WEAVERS CO-OPERATIVE SOCIETY LTD., Z. 322

எப்படின்னு அப்புறம் சொல்றேன்.

இந்தப் பேய் பிடிக்கும் ஃபிலிம் இண்டஸ்ட்ரிக்கும் நிறைய தொடர்பு உண்டு. விஷ்ணுவர்தன் இயக்கத்தில் ஒரு படத்துல நான் நடிக்கிறேன். அந்தப் படத்தோட ஷூட்டிங் பெங்களூர் அசோகா ஓட்டலில் நடந்துகிட்டு இருந்தது. விஷ்ணுவர்தன் அன்னிக்கு நடக்கப்போற ஷூட்டிங் கேரக்டர்/ சீன் பற்றிப் பேச கூப்பிட்டிருந்தாரு. நான் அவர் ரூமுக்குப் போயிக்கிட்டிருக்கேன். என் பின்னால என்னோட உதவியாளர் வனஜாம்மா வர்றாங்க. நான் விஷ்ணுவர்தன் ரூம தட்டுவதற்கு முன் கதவு லேசா திறக்குது. நான் ஸார்!ன்னு குரல் கொடுக்கும்போது எதிரே விஷ்ணுவர்தன் ஸார்! என்ன ஸார் கூப்பிட்டீங்களேன்னு கேட்கும்போதுதான் பார்த்தேன். அவர் முகத்தில் ரெண்டு கண்ணு இல்ல. காலியா இருந்தது. வாயும் காலியா ஓட்டையா இருந்தது. அவர் ரூபத்துல வேற ஏதோ ஒரு அமானுஷ்யத்தோடத்தான் பேசிக்கிட்டு

# ஒரு மூர்த்தி!




இருக்கோம்னு தோணும்போதே வனஜாம்மான்னு அலறி மயங்கிட்டேன். பின்னாடி வந்த வனஜாம்மாவும் அலறிட்டாங்க. அப்புறம்தான் தெரிந்தது. பீல்டில பயப்படாத ஊர்வசி மேடம் பயந்துட்டா, நாம் ஃபாரின்லேர்ந்து வாங்கி வந்த

10% - 45% Govt. Rebate
ThicoSilks
THIRUBUVANAM SILK WEAVERS CO-OPERATIVE SOCIETY LTD., Z. 322

இந்த காஸ்ட்லி முகமூடியை வெச்சி ஷூட்டிங்க துவங்கிடலாம்னும் மனோபாலா சொன்னதால இந்த ஏற்பாடு என்று.

முதல் முறையா பேய் இல்லாத ஒரு முகமூடியைப் பார்த்து பேந்த பேந்த முழித்து அலறியது இதுதான்.

பில்லி, சூன்யம் இதெல்லாம் உண்டா? மந்திரத்தால் மத்தவங்கள அழிக்க முடியுமான்னு என்கிட்டே கேட்டால் முடியாதுன்னுதான் சொல்வேன். ஒரு பழமொழி உண்டு. 'ஆயிரம் ஆர்த்தி - ஒரு மூர்த்தி'ன்னு. ஆர்த்தி என்றால் ஏக்கம். மூர்த்தி என்றால் உருவம். ஆயிரம் பேரோட ஏக்கம் எண்ணம்தான் ஒரு மூர்த்தியாக ஒரு



✽ விஷ்ணுவர்தன்



✽ மனோபாலா

உருவமாக, ஒரு செயல்பாடா மாறும் என்பதுதான். நாலுபேர் வாயில நிக்காதேடான்னு வீட்டுப் பெரியவங்க சொன்னது இல்ல. இப்படிப் பல பேரோட வாயில, புத்தியில நம்பள பத்தி வரும் கோபம், வெறுப்பு, சாபம், தீய எண்ணம் எல்லாம் ஒண்ணா சேர்ந்து நமக்குக் கெடுதலா மாற வாய்ப்புண்டு. அதுதான் 'ஆயிரம் ஆர்த்தி - ஒரு மூர்த்தி மத்தபடி பில்லி சூன்யம் பத்தி எனக்கு நம்பிக்கையில்லை.

சின்ன வயசுல பாட்டிச் சொன்ன ஒரு கதை ஞாபகத்தில் வருது. அண்ணன் - தம்பி ரெண்டு பேரும் வேதம், மாந்திரிகம், தாந்திரிகத்தில் கற்றுத்தேர்ந்த நம்பூதிரிகள். ரெண்டு பேரும் அழகானவர்கள். இதில் அண்ணன் மட்டும் கொஞ்சம் பெண் சபலம் கொண்டவர். அவர்கள் இருக்கும் ஊரை விட்டு ஒதுங்கியிருக்கும் காட்டுக்குள், ஒரு கிராமத்தில் நாக பூஜை நடப்பதாகச் சேதி வருகிறது. அந்தப் பூஜையில் கலந்து கொண்டால் எல்லோரையும் வசியப்படுத்தும், துர்தேவதைகளைக் கட்டுப்படுத்தும் சூட்சுமமும் கிடைக்கும் என்பதால் இவர்கள் ரெண்டு பேரும் கிளம்புறாங்க...

**"பாஸிட்டிவ் சக்தியாக கடவுள் இருக்கும்போது, நெகட்டிவ் சக்தியாக சாத்தானும் இருக்கத்தானே செய்யும்."**

(தொடரும்)

10% - 45% ThiccoSilks
THIRUBUVANAM SILK WEAVERS CO-OPERATIVE SOCIETY LTD., Z. 322

# எளிய போட்டி சில்கி சாரி!



## மாதம் 3 புடவைகள் பரிசு!

*வாசகர்களே!*

ஊர்வசி எழுதும் 'காலை எழுந்தவுடன் சிரிப்பு!' தொடரைத் தொடர்ந்து படிங்க... தொடரையொட்டி வாரம் ஒரு கேள்வி கேட்கப்படும்.

ஒவ்வொரு வாரமும் ஒரு கூப்பன் இடம்பெறும். விடைகள் மற்றும் உங்களின் பெயர் முகவரி ஆகியவற்றை அதிலேயே எழுதி இணைத்து மொத்தமாய் ஒவ்வொரு மாத இறுதியிலும் சேர்த்து அனுப்ப வேண்டும்.

சரியான விடை எழுதிய மூன்று வாசகர்கள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு, அம்மாதத்துக்கான அதிர்ஷ்டசாலிகளாகப் புடைவைப் பரிசு பெறுவார்கள். **தொடரின் இறுதியில் ஒரு மெகா பரிசும் உண்டு!**

நவம்பர் மாதக் கூப்பன்களை இணைத்து அனுப்ப

கடைசித் தேதி : **10.12.10**

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**அனுப்பவேண்டிய முகவரி:**

கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,

ஈக்காடுதாங்கல், சென்னை - 32

---

பெயர் : ............................................

முகவரி : ............................................

............................................

............................................

....................பின்கோடு:..................

தொலைபேசி : ....................................

இ-மெயில் : ....................................

நவம்பர் - 7

**முகமூடி அணிந்து ஊர்வசியை பயமுறுத்தியவர் யார்?**

*விடையை டிக் செய்யவும்*

- ☐ மனோபாலா
- ☐ பாட்டி
- ☐ விஷ்ணுவர்தன்
- ☐ வனஜா அம்மா

'குளோனிங்', கண்ணிவெடிகளை விட பேராபத்தை விளைவிக்கக்கூடியது என அனைவரும் உணர்ந்து, இதை முழு மூச்சோடு எதிர்த்து உலகைக் காக்க வேண்டும்!

**- கு.ப.இரகுநாதன், பூவிருந்தவல்லி**

'அம்மாயி' பற்றி கார்த்திக்குக்கு என்னமாய் ஓர் அபிப்ராயம். நம் கண்கள் பனிக்கின்றன.

**- எஸ்.அமிர்தா, சென்னை-26**

பங்களிப்பு ஓய்வூதியத் திட்டம் பற்றி டி.பாலசுந்தரம் விளக்கியது அரசு ஊழியரான எனக்கு மிகவும் பயனுள்ளதாக இருந்தது.

**- அ.சு.கிருஷ்ணன், புதுச்சேரி**

லஞ்ச ஊழல் தவிர்த்த ஆட்சிக்கு, ஜெயலலிதாவால் உத்தரவாதம் அளிக்க முடியுமா? என்று தலையங்கத்தில் கேட்டிருக்கிறீர்களே, அதுதாங்க பில்லியன் டாலர் கேள்வி!

**- கே.தெய்வசிகாமணி, திருவல்லிக்கேணி**

போளூர் சி.ரகுபதி எழுதிய கிழவனுக்கு ஒரு போர்வை சிறுகதை படித்ததும் மனசு கனத்தது.

**- எம்.செல்லையா, சாத்தூர்**

ஊர்வசியின் தொடரைப் படித்தாலே சிரிப்புத்தான் வருகிறது. நல்ல நடிகை என பெயரெடுத்த அவர் இப்போ நல்ல எழுத்தாளர் என்ற பெயரையும் எடுத்துவிட்டாரே!

**- எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்**

டயபடிஸ்காரர்கள் சாப்பிடுவத கென்றே தனியாகத் தயாரிக்கப்படு ஸ்பெஷல் இனிப்பு வகைகளைப் பற் படித்தேன். உண்மையிலேயே இனிப்பா செய்தி.

**- எம்.இராஜேந்திரன், லால்கு**

ஷாப்பிங் ஸ்பெஷல் அட்டகாசப் முத்து, பட்டு, தங்கம் என்று கல்கியி ஷோகேஸ் ஜ்வலித்தது!

**- ஜே.சி.ஜெரினாகாந்த், ஆலந்து**

விமான நிலைய சோனியா-கலைஞ சந்திப்பு குறித்த கேள்விக்குப் பதிலளித் தராசுவின் பதிலில் மிளிர்ந்தது அக்மார் கல்கியின் விகடம்!

**- சு.ஸ்ரீகாந்த், நெய்வே**

அஞ்சாநெஞ்சர் யார்? தலையங்க கட்டுரை நடுநிலையாய் அமைந்திருந்த தரமான வார இதழ் 'கல்கி'தான்!

**- இரா.செல்லம், தூத்துக்கு**

'ஹரித்துவாரிலிருந்து தில்லிவரை நாமும் ரயில்பயணம் செய்தது போன் இன்னும் நெஞ்சுக்குள் இனிமையா அந்த கட, கட, கட ஒலித்துக்கொண்டே இருக்கிறது.

**- எம்.மீனா, தஞ்சாவூ**

ஆலங்குடி வெங்கடாசலத்தை ப டப்பகலில் துணிந்து போய் வெட்ட மு யும் என்கிற தைரியம் எங்கிருந்து வரு றது? என்று தராசார் கவலைப்பட்டுள்ளா எல்லாம் நம்ம ஜனநாயக நாட்டில் உள் ஓட்டை ஓடிசலான சட்டங்கள்தான்.. வன்முறைக்கு எதிரான சட்டங்கள் கடு.

# அசத்தல் மிக்ஸர்

கடுமையாக இல்லாத வரை... இதுமாதிரி படுகொலைகள் தொடரத்தான் செய்யும்.

**- ஜே.சுரேஷ், அல்லிக்குட்டை**

ஆடு, மாடுகளை பட்டிகளில் அடைத்து வைப்பது மாதிரி, தொண்டர்களை அடைத்து வைத்து, அரசியல்வாதிகள் தங்கள் ஆத்திரத்தை, அபிலாஷைகளைத் தீர்த்துக் கொள்ள ஆர்ப்பாட்டம் நடத்துவதை, ஆஹா... ஓஹோ... என்ன கூட்டம்.. என்ன கூட்டம்.. என்று 'கல்கி' போன்ற பத்திரிகையும் சிலாகித்துப் பல பக்கங்களை பாழ் பண்ணுவதை ஜீரணிக்க முடியவில்லை...!

**- பா.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி**

ஜீவன் இழையோடும் ரமேஷ் ஜாவரின் கலைநயம் மிகுந்த ஓவியங்கள் ஆறும் அறுசுவை விருந்து!

**- எஸ்.எம்.பாலசுப்ரமணியன், போடிநாயக்கனூர்**

நியூஸ் மிக்சர் தகவல்கள் செம அசத்தல்!

**- என்.காளிதாஸ், சிதம்பரம்**

ஞாநி தமக்கு வரும் 'மிரட்டல் கடிதங்களை (அயோத்தி தீர்ப்பு பற்றி எழுதியதற்கு) 'கோபத்தின் வடிகால்' எனக் கூறுகிறார். ஆனால் அயோத்தியில் சர்ச்சைக்குட்பட்ட இடத்தில் போக்ரான்-3 அணுகுண்டு வைத்து வெடித்துவிட்டால் எவனும் அங்கே போகமாட்டான் என்று எழுதியதும்கூட 'ஞாநி கோபத்தின்' வடிகால்தானே!

**- தேசிகன், திருச்சி-6**



# கனவு பல காட்டல்!

## 1 ஆங்கில ஆச்சர்யங்கள்

நவீன கவிதை இன்று அற்புத உயரங்களைத் தொட்டிருக்கிறது. புதிய கவிஞர்கள், தம்முடைய வித்தியாசமான கவிதைகளின் மூலம் தொடர்ந்து அறிமுகமாகிக்கொண்டே இருக்கிறார்கள். பின்னர் அவர்களுடைய கவிதைகள் புத்தகங்களாக வெளியாகின்றன. ஒவ்வொரு ஆண்டும் குறைந்தபட்சம் 10 புதிய கவனிக்கத்தக்க கவிதைத் தொகுதிகள் வெளிவருகின்றன.

நவீன கவிதைகள் இன்று அடைந்திருக்கும் வளர்ச்சியை, நான் கண்டுகொண்டவரையில் இந்தத் தொடரில் எடுத்துச் சொல்ல இருக்கிறேன். கவிஞர்கள், கவிதைகள், தொகுதிகள் என்று நாம் பேசப் போகும் முன்னால், நவீன கவிதையின் முன்னோடிகளைப் பற்றிப் பார்த்துவிடுவது பொருத்தமாக இருக்கும்.



ஞானக்கூத்தன்

இந்தியாவில் பிறந்து ஆங்கில மொழியில் எழுதியோரின் கவிதைகளை யூனிஸ் டி சௌசா Early Indian Poetry in English: An Anthology தொகுத்திருக்கிறார். 1829ஆம் ஆண்டு முதல் 1947 ஆம் ஆண்டு வரையான கவிதைகளின் தொகுப்பு இது. இந்திய மொழிகளில் நவீன கவிதை உதயமாவதற்கு இக்கவிதைகளே முன்னோடியாக அமைந்தவை என்று சொன்னால் தவறாகாது.

ஹென்றி தொராஸியோதான் ஆங்கிலத்தில் உருவாகும் இந்தியக் கவிதை என்ற வினோதத்தைத் தொடங்கி வைத்தார். அவரின், 'டு இந்தியா - மை நேடிவ் லேண்ட்', 'லைன்ஸ் டு' அன் இன்ஃபண்ட், 'நைட்' முதலிய கவிதைகள் இத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

காசிப்ரஸாத் கோஷ் என்ற வங்காளக் கவிஞரின், 'இளம் விதவைக்கு' என்ற கவிதை இத்தொகுதியில் இருக்கிறது. 'பாலைவனத்துப் பூப்போலத் தனிமைப்பட்டவள் நீ' என்று தொடங்குகிறது இக்கவிதை. காசிப்ரஸாதின் 'த ஃபேர்வெல் ஸாங்' என்ற கவிதை நெகிழ்வைத் தருகிறது. 'செப்டெம்பரில் சந்திரன்' என்ற கவிதையும் 'இறந்துபோன ஒரு காக்கைக்கு' என்ற கவிதையும் காசிப்ரஸாதின் பெருமைக்குப் பங்களிப்பவை.

கோவின் சுந்தர் தத்தின் ஒரு கவிதை விசாகப்பட்டினத்தைப் பற்றிப்

பேசுகிறது. இவர் 'கங்கை மீது இரவு' என்ற கவிதையில் சூரிய ஒளி சுட்டிக் காட்டிய குறைகளிலிருந்து பொருள்களை விடுவித்ததாக நிலவைக் குறிப்பிடுகிறார்.

க்ரீஸ் சுந்தர் தத், கவிதைகளில் வேப்பமரம், குருவி முதலிய கவிதைகள் நமது ஆர்வத்தைத் தணிக்கின்றன. ராம சர்மாவின் கவிதைகளில் 'த ஜாலி பெக்கர்ஸ்' (பிச்சைக்காரர்கள்) என்ற கவிதை நகைச்சுவையை முயல்கிறது. 'எ ப்ரேயர்' என்ற கவிதையில் சர்மா அவதாரங்களைப் பிரஸ்தாபிக்கிறார்.

தாரு தத் கொஞ்சம் கூடுதலாக அறியப்பட்ட பெண் எழுத்தாளர். இவர் சவுக்கு மரத்தைப் பற்றி கவிதை எழுதியுள்ளார். இந்த மரத்தின் அடியில் இளமைப் பருவத்தில் விளையாடியதைக் குறிப்பிடுகிறார். தமிழச்சியின் 'மஞ்சணத்தி' நமது நினைவில் வந்து போகிறது. மஞ்சணத்தி மட்டுமல்ல, நற்றிணையின் புகழ் மிக்கக் கவிதை ஒன்றுகூட. வால்ட் விட்மனின் 'ஓ' மரம், பெருமாள் முருகனின் 'பனை மரம்', நஞ்சுண்டனின் 'விடுமுறை நாளில்...' முதலான கவிதைகளும் மனத்தில் நிழலாடுகின்றன.

இந்திய ஆங்கிலக் கவிதைகள் பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே தலை



போகிற விஷயங்களைப் பேசத் தொடங்கிவிட்டன என்பதற்கு ஜோசப் பர்ததோ கவிதைகளைக் குறிப்பிடலாம். இவர் 'பிராமணப் பெண்', 'பறைப் பெண்', 'தள்ளி வைக்கப்பட்ட மனைவி' முதலான கவிதைகள் நமக்குக் கவிதை என்ற அளவில் மகிழ்ச்சியைத் தருபவை.

இத்தொகுப்பில் மற்றொரு பிரபலமான கவிஞரின் கவிதை இடம்




பெற்றுள்ளது. அவர் சரோஜினி நாயுடு.

கன்னடம் மற்றும் ஆங்கில மொழிகளில் எழுதிய ஜி.அண்ணாஜி நமது கவனத்தைப் பெரிதும் கவர்கிறார். இவர் யார், என்ன செய்தார் என்ற விவரங்கள் கிடைக்கவில்லையாம். ஆனால் இவர் 1912ல் துண்டுப் பிரசுரமாக வெளியிட்ட 'த லைட் ஹவுஸ்' என்ற கவிதை ஆச்சர்யமாக இருக்கிறது. சென்னை கடற்கரையில் ஒரு கலங்கரை விளக்கம் இருப்பதைக் குறித்து ஒரு கவிஞரும் தமிழில் எழுதியிருப்பதாகத் தெரியவில்லை. ஆனால், அண்ணாஜி ஒரு நீண்ட கவிதையையே எழுதி வெளியிட்டிருக்கிறார். 'தொலைவில் ட்ராம் வண்டிகளின் கிறீச்சிடல்களும் கடந்து செல்லும் வண்டித் தொடர்களின் சப்தமும்' கேட்பதாக அண்ணாஜி எழுதுகிறார். மேலும்,

> மணலில் நூற்றுக்கணக்கானவர்கள்
> குழுமுகிறார்கள். ஆனால்
> அவர்கள் நடுவில் நான் தனியனாய்
> உணர்கிறேன்

என்று அண்ணாஜி எழுதுகிறார். இவர் சொல்லும் கடற்கரை சென்னை உயர்நீதி மன்றத்துக்கு எதிரில் இருந்தது என்று தோன்றுகிறது.

**இந்தியாவில் பிறந்து ஆங்கில மொழியில் எழுதியோரின் கவிதைகளை யூனிஸ் டிசௌசா Early Indian Poetry in English : An Anthology தொகுத்திருக்கிறார்**

யூனிஸ் டிசௌசாவின் தொகுப்பைக் கவனிக்கும்போது இந்தியக் கவிதையின் புதிய உதயம் முதலில் ஆங்கில மொழியில் உருவாகியதென்றால் உண்மைதான். அண்ணாஜி பாரதிக்கு சமகாலத்தவர். தமிழின் நவீன கவிதைகூட முதலில் ஆங்கில மொழியில் பிறந்ததாகக் கூறலாம். அதுவும் 'வசன கவிதை'. இதன் ஆசிரியர் யார்?

நீங்கள் யூகிக்க முயல்வது போல சுப்ரமணிய பாரதியாரா? இல்லை. வேறு யார்?

**(அடுத்த வாரம் பார்ப்போம்)**

# கலைப் பொக்கிஷமாய்...

# கல்கி தீபாவளி மலர் 2010



## ஜனநாயகத் திருவிழா!

-என். கோபாலசாமி



## அர்த்தம் இழக்கலாமா அரசியல் சாசனம்?

எம்.என்.வெங்கடாச்சலய்யா
(உச்சநீதிமன்ற முன்னாள் தலைமை நீதிபதி)






அடர்த்தியான கட்டுரைகளுடன் அழகிய படங்களுடன்

கதை, கவிதை, நடனம், ஆன்மிகம் ஓவியம், சிற்பம், என கலந்துக்கட்டி கலக்க வருது...

விலை ரூ.120 மட்டும்

உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்யுங்கள் அல்லது கூரியர் மூலம் பெற ரூ.30/- சேர்த்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்புங்கள்: விற்பனை மேலாளர் கல்கி தீபாவளி மலர், கல்கி, 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, சென்னை - 600 032. தொடர்புக்கு : 044-43438844

# மாடியில் சூர்யா தோட்டம்!



**ஜோதிகாவின் கவனமெல்லாம் சமையலறை பற்றிதான் இருந்தது.**

சென்னை அடையாறில் அமைந்திருக்கும் சூர்யாவின் கனவு இல்லத்தைக் கட்டிக்கொடுத்தவர்கள் பிரபல கட்டுமான நிறுவனமான அக்ஷயா ஹோம்ஸ். அதன் தலைவர் திரு. சிட்டிபாபுவுடன் பேசினோம்.

''சூர்யா என் நீண்ட நாள் நண்பர். நாங்கள் நகரில் பல அடுக்குமாடி வீடுகளைக் கட்டிக் கொடுக்கிறோம். அடையாறு ஜங்ஷனிலிருந்து பெசன்ட் நகர் கடற்கரைக்குப் போகும் சாலையில் ஔவை ஹோம் எதிரில் மிக லேட்டஸ்டான டிசைன் மற்றும் தொழில்நுட்பத்தில் அடுக்குமாடி வீடுகளைக் கட்டத் திட்டமிட்டோம். கடற்கரை என்றதும் காலை எழும் உதய சூரியன், மாலை மறையும் அந்தி சூரியன் நினைவுக்கு வரும். ஆதலால் வளாகத்துக்கு சூர்யா என்றே பெயர் வைத்தோம். இது பற்றி சூர்யாவிடம் சொன்னேன். வீடு வாங்கும் யோசனையிலிருந்த சூர்யா, உடனே வந்து பார்த்தார். அந்தச் சாலையும் சூழலும் அவருக்கு மிகவும் பிடித்திருந்தது.



* சிட்டிபாபு



உடனே தனக்கும் அபார்ட்மெண்ட் வேண்டும் என்று ஆர்டர் கொடுத்துவிட்டார்.

டூப்ளெக்ஸ் மாடல் வீடுகளை அவர் வாங்கியிருக்கிறார். எங்களுக்குக் கட்டி முடிக்க பன்னிரண்டு மாதங்கள் ஆயிற்று. அவ்வப்போது சூர்யா, ஜோதிகாவுடன் வந்து கட்டுமானத்தைப் பார்த்துச் செல்வார். அடிப்படை டிசைனில் அவர் பெரிதாக ஒரு திருத்தமும் சொல்லவில்லை. நான்கு படுக்கையறைகள், ஜிம்முக்குத் தனி ரூம், ஹோம் தியேட்டர் செட் அப்புக்கு ஒரு ரூம் என்று தாராளமான வீடு. தரை, சுவர், பெயிண்டிங் பாத்ரூம் ஆகிய விஷயங்களில் தம் விருப்பத்தைத் தெரிவித்தார் சூர்யா. அவர் விரும்பியபடியே லைட் கலர் பெயிண்டிங் தான் சுவருக்குக் கொடுத்திருக்கிறோம். பாத்ரூம் பளிங்குபோல் இருப்பது முக்கியமல்ல. வழுக்கலாக (slippery) இருக்கக்கூடாது என்பதில் குறியாக இருந்தார். கிரானைட் அவர் விரும்பிய டிசைனில், வண்ணத்தில் பதிக்கப்பட்டிருக்கிறது. ஜோதிகா மிகவும் கவனமாக இருந்தது சமையலறை குறித்துதான். அவருக்குப் பிடித்த வண்ணம் சுவருக்குக் கொடுத்தோம். நல்ல காற்றோட்டம், வெளிச்சம் உடையதாக கிச்சனை அமைத்திருக்கிறோம். கார்த்தியும் தம் பங்குக்கு சில திருத்தங்களைச் சொன்னார்.

அபார்ட்மெண்டின் மாடியில் தோட்டம் உண்டு. சூர்யா, கார்த்தியின் நண்பர்கள் பிரமாதம் என்று பாராட்டுகிறார்கள். அபார்ட்மெண்டில் சிமெண்ட் கலவையில் (RCC) பயன்பாடு மிகவும் குறைவு. பெரும்பாலும் மரம், கண்ணாடி, ஸ்டீல் மற்றும் கிரானைட்தான். எங்கள் கட்டுமானங்களில் இந்த அபார்ட்மெண்ட் மிகச் சிறந்தது'' என்கிறார் சிட்டிபாபு.

- ஸ்ரீநி












"ஜெயில்ல ஆலோசனைப் புத்தகம் வச்சிருக்கக் கூடாது."
"ஏன்?"
"எல்லாக் கைதிகளும் தங்களோட தண்டனையை நீட்டிக்கச் சொல்லிக் கேட்டிருக்காங்க!"
- அம்பை தேவா




# ஒரிஜினல் 'பஞ்சு' டயலாக்!

# "பதற வெச்சுட்டியே!" சூர்யா!



**அப்பாவிடம் கற்ற யோகாதான் என் உடம்புக்கு ஃபிளக்ஸிபில் தருகிறது!**

'காக்க காக்க' படத்தை முடித்துவிட்டு, ரிலீசுக்குத் தயாரானபோது, நான் மூணாறு மலைப் பகுதியில் ஷூட்டிங்கில் இருந்தேன். தொடர்ந்து தோல்விகளையே பார்த்துச் சலித்தவனுக்கு வெற்றியின் ருசியை இந்தப் படம் அளிக்கும் என்ற டென்ஷன் கலந்த நம்பிக்கையோடு தூக்கமில்லாமல் தவித்துக் கொண்டிருந்தேன். நள்ளிரவில் செல்ஃபோன் ஒலித்தது. அப்பாதான் பேசினார்.

''சூர்யா! இப்போதான் 'காக்க காக்க' பாத்துட்டு வீட்டுக்கு வந்தேன். படமே கிளைமேக்ஸில்தான் ஆரம்பிக்குது. ஏரியில் இருக்கிற அந்த அவுட் ஹவுசில் இருந்து, துப்பாக்கிக் குண்டை மார்பில் வாங்கிக் கொண்டு, அவ்வளவு உயரத்தில் இருந்து அப்படியே டைவ் அடிச்சு, தண்ணீருக்குள்ள வந்து விழறியே! அதைப் பார்த்துட்டு ஆடிப்போயிட்டேன். என்னோட சினிமா லைஃப்ல நான் இப்படி எல்லாம் பண்ணினதில்லை. படம் ஆரம்பத்துலேயே பதற அடிச்சிட்டியேப்பா!'' என நா தழுதழுக்கச் சொன்னார். விடியும் வரை எனக்குத் தூக்கம் வரவில்லை.

'காக்க காக்க' படத்தின் முதல் காட்சியில் நான் அத்தனை நன்றாகச் செய்ததற்குக் காரணமே அப்பாதான். அந்தக் காட்சியை டூப்பை வைத்து டைரக்டர் கௌதம் எடுத்தாலும், மானிட்டரில் போட்டுப் பார்த்தபோது டைவ் அடிப்பது டூப் என்று அப்பட்டமாகத் தெரிந்ததால் டூப் வேண்டாம் என்று நானே களத்தில் இறங்கிவிட்டேன். காட்சியும் அற்புதமாக வந்துவிட்டது.

சின்ன வயசிலே மற்ற சினிமாக்காரர்களின் பிள்ளைகள் பாட்டு, டான்ஸ், ஃபைட் என்று கற்றுக் கொண்டபோது, அப்பா, 'நீச்சல் ஒரு மனிதனுக்கு மிக முக்கியம்' என்று உட்லண்ட்ஸ் ஹோட்டல் நீச்சல் குளத்துக்கு எங்களை அனுப்பி வைக்க, அங்கே பயிற்சியாளர் ராவ் கற்றுக்கொடுத்த பல்வேறு வகையான நீச்சல், அம்மாவின் ஊரான கவுண்டன் பாளையத்தின் நூறு அடி ஆழமுள்ள பிரம்மாண்டமான கிணறுகளில் நாங்கள் அடித்துப் பழகிய டைவ்களும் துணிச்சல்களும் அபாரமானது. உபரியாக அப்பாவிடம் கற்றுக்கொண்ட யோகாவால் கிடைத்த பாடி ஃபிளக்ஸிபிலிடி!

தகவல் : மௌலி

# புத்துணர்ச்சி புதுப் பொலிவுடன்

## ALIVE! ஃபில்டர் காஃபி

### இப்பொழுது சிறப்பான சலுகைகளுடன்*




- அலைவ்! 200 g பேக்குடன் ₹ 11/– மதிப்புள்ள சேவரிட் சேமியா இலவசம்*
- அலைவ்! 100 g பேக்குடன் ₹ 5 /– மதிப்புள்ள டாப் ரேமன் ஸ்மூடுல்ஸ் இலவசம்*

*நிபந்தனைக்கு உட்பட்டது. இச்சலுகை ஸ்டாக் உள்ளவரை மட்டுமே. அலைவ்! ஃபில்டர் காஃபி இச்சலுகை இல்லாமலும் கிடைக்கும்.

அலைவ்! ஃபில்டர் காஃபி பற்றி மேலும் விவரம் அறிய www.fresh-honest.com என்ற இணையதளத்தை தொடர்பு கொள்ளவும்.
☎ 1800-425-3330 www.facebook.com/alivecoffee

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57" Registered No.TN/CC (S) DN / 144 / 09 - 11" Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN / CC (S) DN / 70 / 09 /11" Registered as a Newspaper in Srilanka.


# Sri Aishwarya Sarees




Temple of Silk Cottons




We are happy to announce our Annual Sale

Till 4th November 2010

Introducing the

**Varna Roopini Collections**

Silks
Silk Cottons
Kalathmika
Printed Silk Cottons
Embroidery Sarees
Embroidery Blouses
Cottons
10 yards Sarees
and
Dress Materials

Give Life to Handloom

upto 30%* Discount

*Conditions Apply

No. 19, Arcot Street, T.Nagar, Chennai - 600 017. INDIA (Near M.G.R. Memorial House)
Tel : 044-4260 4447 Mobile : 98409 83999